புதியது

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது

ஏற்கெனவே பால் அடங்கியது




**நீங்கள் பாசத்துடன்
ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின்
வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரண சக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. அதிக முழுமையான திட உணவு.

உடல் நலத்தின் உறைவிடம்—

---

**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்: உங்களது பிரதியைப்பெற தபால் மற்றும் இதர செலவிற்கு ரூ. 1/— தபால்தலை உள் வைத்து எழுதுவீர் இம்முகவரிக்கு—தபால் பெட்டி எண் 19119, (FCM-21) பம்பாய் 400 025.

---

CLARION/8/GX/4/203 TAM



# தங்க ரதம்



ஸ்ரீ காஞ்சி காமாட்சி அம்பாளுக்குத் தங்கரதம் தயார் செய்யப்பட்டு, கரிக்கோலம் நடந்தது கடந்த செப்டம்பர் ஏழாம் தேதியன்று.

கரிக்கோலம் என்றால் ரதத்தை அம்பாளை வைத்து வெள்ளோட்டம் விடுவதற்கு முன் பூர்ணக் கும்பம் வைத்து பிராகாரத்தை வலம் வருவது. செப்டம்பர் 9–ம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 7 மணிக்கு ஸ்ரீ காமாட்சி தேவியை சுவர்ண ரதத்தில் எழுந்தருளச் செய்து நான்கு ராஜ வீதிகளிலும் உலா. இந்த விழாவை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் தொடங்கிவைத்தார்.

''நகரேஷு காஞ்சி'' என்று புகழ்பெற்ற காஞ்சி மாநகரம் இன்று மூன்று பெரியவர்களோடும் ஸ்ரீகாமாட்சியின் கடாட்சத்தோடும் கல்யாண கோலம் கொண்டு ஜொலிக்கிறது. காலையில் ஆச்சார்யர்களின் விஸ்வரூப தரிசனம், ஸ்ரீ காமாட்சி ஏகாம்பரேஸ்வரர் தரிசனம் .செய்து வந்தால், மடத்தில் சந்திரமௌளீஸ்வரர் பூஜை. இரண்டாம் கால பூஜை முடிந்து தீபாராதனைக்கு ஸ்ரீ பெரியவர் அவர்களும், புதுப் பெரியவர் அவர்களும் பிரதட்சிணம் செய்யும் காட்சி இருக்கிறதே, மெய்சிலிர்த்துப் போகிறது.

கடந்த ஏழாம் தேதி மாலை ஏழரை மணி வரை தங்கத் தேர் எப்படி உலாவரப்போகிறதென்று ஆச்சர்யமாக இருந்தது. ஏனென்றால் தேர் பூர்த்தியாகாமலேயே இருந்தது.

இரவு பத்தரை மணிக்கு ஸ்ரீ புதுப் பெரியவர்கள் வந்து தேரைப் பார்க்கும் பொழுது பவனி வரத் தயாராக இருந்தது தங்கரதம்!

புதுப் பெரியவர் அவர்கள் மேற்பார்வையில் ஸ்ரீ லக்ஷ்மணன் அவர்கள் தேரில் பூர்ண கும்பத்தை வைத்தார்கள். இரண்டு யானைகள் முன்னால் செல்ல, நாதஸ்வரத்தில் மல்லாரி சுநாதமாகப் பெருக, வாண வேடிக்கையின் தங்க கோபுரம் ஜொலிக்க இவ்வளவையும் மேற்பார்வையிட்டபடி ஸ்ரீ புது பெரியவர்கள் நடக்க, தங்கரதம் நான்கு பிராகாரங்களையும் வலம் வந்தது.

கடந்த ஜூலை 1983–ல் ஆரம்பிக்கப்பட்ட. தங்கரதம் 1984 செப்டம்பரில் முடிந்தது ஒரு வியக்கத்தக்க சாதனைதான். நல்ல சுத்தமான தேக்கு மரத்தில் வேலைப்பாடுகள் செய்து, வெள்ளித் தகடுசேர அமைத்துச் சகடம் வரை செய்திருக்கிறார்கள். பிறகு தேர் முழுவதும் தங்க ரேக்குகளைப் பொருத்தியிருக்கிறார்கள். ரதத்தில் பொருத்தப்பட்டிருக்கும் இருபத்தி நாலு தேவி பொம்மைகள், சிறிய வாகனங்கள், தேருக்குள் அமையப்பெற்ற பத்ம பீடம், ஷட்கோணம் தேரைச் செலுத்தும் ப்ரம்மா, இரண்டு குதிரைகள் ஆகிய எல்லாமே தங்க ரேக்குகளாக அமைத்திருக்கிறார்கள். இந்தத் தங்க ரதம் செய்வதற்கு நூறு கிலோ கிராம் வெள்ளியும், பத்து கிலோகிராம் தங்கமும் தேவைப்பட்டன. தங்கம் 24 காரட். தமிழ்நாட்டுக் கோயில்களுக்குப் பதினொரு தங்க ரதங்கள் செய்து புகழ்பெற்ற ஏ.ஆர்.சி மாயவரம் நிறுவனத்தினர் ஸ்ரீகாமாட்சி தங்க ரதத்தையும் செய்தார்கள். மர வேலைப்பாடுகளுக்குப் பெருமாள் ஆசாரி, வெள்ளி, செப்பு வேலைகளுக்கு பழனி ஆச்சாரி தங்க ரேக்குகள் செய்ய பிச்சை ஆகியோர் தங்கள் ஆட்களுடன் இரவு பகல் பாராது வேலை செய்து முடித்தார்கள்.

இந்தக் தங்கத் தேருக்கான செலவுசளை ஸ்ரீமடமே ஏற்றுக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்றும், பௌர்ணமியன்றும் மற்ற பஞ்ச பர்வா உத்ஸவங்களிலும் ஸ்ரீகாமாட்சி உத்ஸவ மூர்த்திக்கு அபிஷேகம் செய்வித்து, விசேஷ அலங்காரங்களுடன் திருக்கோயில் பிராகாரத்துக்குள்ளேயே தங்க ரதத்தில் புறப்பாடு நடக்கும். இந்த உத்ஸவத்தை நடத்த விருப்பமுள்ளவர்கள் ரூ. 5000 (ரூபாய் ஐயாயிரம் மட்டும்) மூலதனமாகச் சமர்ப்பித்து ஒரு நிரந்தர ட்ரஸ்ட் ஏற்படுத்தி, இதிலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டோ, அல்லது ஒரு உத்ஸவத்துக்கு ரூ.700 (ரூபாய் எழுநூறு மட்டும்) கட்டணமாகச் .செலுத்தியோ, உத்ஸவத்தை நடத்தி வைத்து ஸ்ரீகாமாட்சி. தேவியின் அருளுக்கும் ஸ்ரீ ஆசார்யாளின் அனுக்ரஹத்துக்கும் பாத்திரமாகலாம்.

—லக்ஷ்மி கண்ணன்

**''சிறைச்சாலையில் மனிதனிடம் உள்ள தீய குணங்கள் செழித்து வளர்கின்றன. தூய குணங்கள் தளர்ந்து மறைகின்றன'' என்பது ஆஸ்கார் ஒயில்டின் கருத்துரை. இதற்கு விதி விலக்காக...**

# சிறைச்சாலை

சிறைக்குச் சென்ற ஒருவர், தம்மிடம் இருந்த தீய குணங்களை அழித்துத் தூய குணங்களை வளர்த்து, விடா முயற்சியால் பட்டதாரி ஆகி, வழக்கறிஞராக மாறிக் கொண்டிருக்கும் சாதனை நிகழ்த்தியுள்ளார். இச் சாதனையாளர்தான் சி.எம். அருணாசலம்.

அருணாசலம், கோவை மாவட்டத்தில் திருப்பூருக்கு ஆறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள வாவிப் பாளையம் என்னும் கிராமத்துவாசி. உள்ளூர் பள்ளியில் ஆறும் வகுப்பு வரை படித்து, அதற்குமேல் படிக்க விரும்பாமல், பள்ளியை வெறுத்து, பனியன் பேக்டரி தொழிலாளியானார். அவரே ஆயுள் தண்டனைக் கைதியாகிக் கோவைச் சிறைச்சாலைக்குச் சென்ற பின்பு, 'கேடில் விழுச் செல்வம் கல்வி' என்பதை உணர்ந்தார்; உழைத்தார்; பட்டதாரியாக உயர்ந்தார். கைதி அருணாசலம், கல்விமான் அருணாசலம் ஆனார்.

அருணாசலம், ஒரு நடுத்தர விவசாயக் குடும்பத்தின் நான்கு குழந்தைகளில் மூன்றாம் புதல்வன். அவர் குடும்பத்துக்கும், ஊர் மணியக்காரருக்கும் பகை ஏற்பட்டது. விலை கொடுத்து வாங்கிய பூமியில் விவசாயம் செய்ய விடாமல் அடுக்கடுக்கான தொல்லைகளைத் தொடர்ந்து கொடுத்த மணியக்காரர், ஒருநாள் இவர் தந்தை, தமையன், தங்கை ஆகியோரைத் தம் ஆட்களை ஏவி அரிவாளால் தாக்கச் செய்தார். தரையிலே பரவிய இரத்தத்தின் நடுவே வெட்டுக் காயங்களுடன் மூவரையும் கண்ணால் கண்ட அருணாசலம் துடித்தார். அதற்குப் பின்பு, தன் குடும்பத்தையே முற்றிலும் அழிக்க மணியக்காரர் திட்டம் தீட்டியதாக அறிந்து கொதித்தார்.

மணியக்காரரிடமிருந்து தன் குடும்பத்தை எப்படிக் காப்பது?

யோசனையில் ஆழ்ந்த அருணாசலம், பொள்ளாச்சியில் 'என் அண்ணன்' திரைப் படம் பார்த்துக் கொண்டிருந்தார். (20.6.70) திரையிலே பாடல் முழங்குகிறது:

''அடிமையின் உடலில் ரத்தம் எதற்கு?
அச்சப்படும் கோழைக்கு இல்லம் எதற்கு?''

இந்த வரிகள் அவர் மனத்தில் தூங்கிய பழி உணர்ச்சியைத் தூண்டி விட்டன. 'மணியக்காரரைக் கொன்று விடுவது' என்று கணத்தில் முடிவெடுக்கிறார். மறுநாளே, தன் பெரிய அண்ணனைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டு, மணியக்காரரைக் கொலை செய்து விட்டார்.

பதினைந்து வருடத்திற்கு முன்னே நடந்த இச்சம்பவத்தைக் கூறும் அருணாசலத்திடம், ''திரைப்படப் பாடல்தான் உங்களைக் கொலை செய்யத் தூண்டியதா?'' என்று கேட்கிறேன்.

''என் தந்தை வெட்டுக் காயம் பட்ட பிறகு, 'அப்பாவை ஒருத்தன் வெட்டிஞன், அதைப் பார்த்துக் கொண்டிருப்பதா?' என்று சிலர் தூண்டி விட்டாங்க. அதைச் சினிமாப் பாட்டு தீவிரப்படுத்தி ஒரு முடிவுக்கு உடனே வரச் செய்து விட்டது. சினிமா நல்லதும் செய்யுதுங்க. இதைப்போலக்கெட்டதையும் செய்யுதுங்க.''

அருணாசலம் தொடர்ந்து சொல்கிருர்.

''மணியக்காரர் செத்துப் போனர் என்பதை அறிந்த கணத்தில் பயம் ஏதோ விடுதலை பெற்றது போல லேசாக இருந்துதுங்க. ஆனால் அஞ்சே நிமிஷத்தில் நாம் தப்பு செய்து விட்டோம் என்ற பயம்



# என்ன செய்யும்?

வந்து விட்டது. அதிலிருந்தே என் தப்புக்காக நான் இன்னமும் வருந்திக்கிட்டே இருக்கேனுங்க.''

வழக்கு நடந்தது. அருணாசலத்துக்கும் அவருடைய அண்ணனுக்கும் நீதிமன்றம் தூக்குத் தண்டனை (31.10.70) வழங்கியது. அப்பீல் வழக்கில் வாதாடி, தூக்குத்தண்டனையை ஆயுள் தண்டனையாகக் குறைத்தவர் என். டி. வானமாமலை.

*1970*—ல் பத்தொன்பதாம் வயதில் சிறைக்குள்ளே சென்ற அருணாசலம், ஏறத்தாழ இரண்டாண்டுக்குப் பிறகு ஒரு மாத விடுமுறை பெற்று ஊருக்குத் திரும்புகிறார். பேருந்திலிருந்து இறங்கி, மணியக்காரரின் தோட்டத்து வழியே நடந்து தான் அவர் வீட்டுக்குப் போக வேண்டும். அவ்வழியே நடக்கும் அருணாசலம், மணியக்காரரின் மனைவியைப் பார்க்கிறார். செல்வமும் செல்வாக்குமாக வாழ்ந்த அந்தப் பெண்மணி ஏழ்மைக் கோலத்தில் இருப்பதைப் பார்த்ததும் கண்கள் கலங்குகின்றன; சிலநொடியில்



கண்ணீர் தாரை தாரையாகக் கொட்டுகிறது.

''நான் அழுதுட்டேனுங்க. வீட்டுக்குப் போற வரைக்கும் அழுதுக்கிட்டே இருந்தேனுங்க. தப்பு செஞ்ச ஒருத்தரைக் கொன்னேன். ஆனா, அது தப்பு செய்யாத அந்தக் குடும்பம் முழுதையும் பாதிச்சிட்டுதேன்னு அழுதேன்.''

சொல்லும் போதே அவர் குரல் தழுதழுக்கிறது.

சிறையில் படிக்க வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு எப்படி ஏற்பட்டது?

சிறைச்சாலையில் ஒரு நூலகம் இருக்கிறது. அதிலிருந்து சிறிய கதை நூல்களை எடுத்துப் படித்தார். பிறகு அறிவுக்கு விருந்தாகும் நூல்களைப் படித்தார். மு. வ. எழுதிய தம்பிக்கு, தங்கைக்கு முதலிய நூல்களைப் படித்தார்.

(''மு. வ. வின் நூல்கள் எனக்குப் பிடிக்கும். இப்போதும் மு. வ. வின் நூல்களைப் படிக்கிறேன்'') அப்படியே தொடர்ந்து, அங்குள்ள நூல்களையெல்லாம் படித்தார். அதைக் கண்ட ராமச்சந்திரன் என்னும் கைதி, 'எனக்கு இந்தி தெரியும், என்னிடம் இந்தி படித்துக் கொள்ளேன்'' என்று யோசனை கூறினார்.

அருணாசலம் சம்மதித்தார். அவருடன் சிம்சன் என்ற நண்பரும் இந்தி படித்தார். சிறைச் சூப்பிரண்டின் அனுமதி பெற்று முதலில் பிராதமிக் தேர்வு எழுதி முதல் வகுப்பில் வெற்றி பெற்றார். அந்த உற்சாகத்தில் தொடர்ந்து மற்ற இந்தித் தேர்வுகளை எழுதி விசாரத், பிரவீண் ஆகிய இரு பட்டங்களை ஐந்தே ஆண்டில் பெற்றார்.

இந்திப் பட்டத்துக்குப் பட்டமளிப்பு விழா சென்னை இந்தி பிரசார சபையில் நடக்கவிருந்தது. அருணாசலமும் சிம்சனும் பட்டம் பெற வேண்டும், பட்டத்தை அஞ்சல் மூலம் பெறாமல் நேரில் பெற வேண்டும் என்பது இவர் ஆசை. ஆசையை வெளியிட்டதும், ஒரு அதிகாரி, 'நானே என் டிகிரியை போஸ்ட் மூலம்தான் வாங்கினேன். நீயும் அப்படியே வாங்கிக்கோ' என்று மறுத்து விட்டார். ப. ராமநாதன் என்னும் மற்றொரு அதிகாரி இவரது ஆசையை மதித்து, முயற்சி செய்து, சென்னையில் பட்டமளிப்பு விழாவில் கலந்து கொள்ள அனுமதி வாங்கிக் கொடுத்தார்.

''கவர்னர் சுகாதியா தான் பட்டம் வழங்கினார். சிறையிலே படிச்சுப் பட்டம் பெற்றவங்க பலர் இருக்காங்க. தமிழ்நாட்டிலேயே முதல் முதலாப் பட்டமளிப்பு விழாவில் நேரில் கலந்து கொண்டு பட்டம் வாங்கியது நானும் சிம்சனும்தான்'' — சொல்லும் போதே பெருமை முகத்தில் பிரகாசிக்கிறது.

இந்தி மொழியின் மிக உயர்ந்த பட்டங்களைப் பெற்ற பின்பு இவர் கவனம் தமிழிலும், ஆங்கிலத்திலும் திரும்பியது. மதுரைப் பல்கலைக் கழகத்தின் அஞ்சல்வழிக் கல்வியில் சேர்ந்து, மறு ஆண்டே (78) புதுமுக வகுப்புத் தேறினார். பின்பு பி.காம். பட்டத்துக்குப் படித்து, மூன்றும் ஆண்டில் அதனையும் பெற்றார். யாருடைய துணையும்

இல்லை. அவரே குரு! அவரே சீடர்! இதுவரை தமிழ் பயிற்று மொழி. இதன்பின் எம். காம். சேர்ந்தார். இதில் ஆங்கிலம் பயிற்று மொழி. துணை செய்வோர் யாருமில்லை. தேர்வில் தோல்வி ஏற்பட்டது.

எம். காமை விட்டுவிட்டு சி. ஏ. செய்யலாம் என்று நினைத்தார். அப்போது நடந்த ஒரு நிகழ்ச்சி அவரை சி. ஏ.வை விட்டு விட்டு, சட்டப்படிப்பைத் தேர்ந்தெடுக்கச் செய்தது.

கோவைக்கு அருகிலே இருந்த சிற்றூரிலிருந்து ஒரு பெண்மணி சாந்திரபுரம்மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டார். அவரைப் பார்க்கத் தினமும்அவளுடைய தாய் வருவாள். ஒருநாள் தாய் தனக்குப் பதில் தன் மகனை அனுப்பினாள். சுமார் பதினாறு வயதான அந்த இளைஞன் தமக்கையைப் பார்த்துவிட்டு, சாந்திபுரம் பஸ் நிலையத்தில் பஸ்ஸுக்காகக் காத்திருந்தான். அப்போது ஒரு போலீஸ்காரர், 'தம்பி, கொஞ்சம் என்னுடன் வா' என்று அழைத்தார். ஒன்றும் தெரியாத பையன் உடன் சென்றான். அந்தப்போலீஸ்காரர் அவனைச் சந்தேகக் கேஸில் பிடித்து, சிறைக்குள் தள்ளி விட்டார். பல நாட்கள் சென்ற பின்தான் அவன் வீட்டார் வந்து ஜாமீனில் மீட்டுக் கொண்டு போனார்கள்.

''அந்தப் பையனின் சோகக் கதைதான் என் படிப்பைத் திசை மாத்திடிச்சுங்க. அவனைப் போல கல்வியும் செல்வமும் இல்லாத பலருக்கு உதவி செய்யணும்னு நினைச்சேங்க. அதனாலே சி. ஏ. படிக்கிற எண்ணத்தை விட்டு, பி. எல். படிக்க முடிவு செஞ்சேன்.''

அருணாசலம் விடுதலை ஆவதற்கு முன்னர் சட்டக் கல்லூரிக்கு மனு செய்தார். சூப்பிரின்டெண்டண்ட் ஆர்.ஏ.ஜூ. அக்கின்சன் துணை செய்தார். அவருக்கு சட்டக் கல்லூரியில் இடம் கிடைத்தது. அதற்கு முன் அவர் விடுதலை ஆனார். என்றாலும் சட்டக் கல்லூரியில் முழு நேர மாணவராகச் சேர்ந்து முதலாண்டுத் தேர்வை எழுதி முடித்திருக்கிறார்.

'சிறையில் எழுதிய தேர்வுகளுக்குப்பணம் எப்படிக் கிடைத்தது?' என்று கேட்கிறேன்.

''சூப்பரின்டென்டண்டிடம் பணத்திற்காக மனுஎழுதித் தந்தேன். எனக்குப் படிப்பிலே இருக்கிற ஆர்வத்தைப் பார்த்து அவங்க ஐ. ஜிக்கு மனு அனுப்பிச் சிபாரிசு செய்தாங்க. ஐ. ஜி. தேவையான பணம் வழங்க ஆணையிட்டார். ஐந்நூறு ரூபாய் வரை ஐ. ஜி. அனுமதி வழங்கலாம். அதுக்கு மேலே அரசுதான் அனுமதி வழங்கணும்.''

''கோயமுத்தூர் காஸ்மாஸ் லயன்ஸ் கிளப் ஏதோ உதவி செய்வதாகப் படித்தேனே?''

''அதெல்லாம் விடுதலையான பிறகு. திருப்பூரிலிருந்து தினமும் சட்டக் கல்லூரிக்கு வந்து போக, பஸ் செலவுக்கு மாதம் ரூ. 142 கொடுத்தாங்க'' என்றார், அருணாசலம்.

பஸ்ஸில் வந்தால் ரூ. 142 செலவாகும். டிரெய்னில் வந்தால் செலவு மிகவும் குறைவு. அருணாசலம் மாணவர் சலுகைக் கட்டணத்தில் தினமும் புகைவண்டியில் வந்து சென்றார். அதனால், பண உதவி செய்த கிளப்பிற்கு, தான் பஸ்ஸில் வருவதில்லை என்பதையும், பணத்தைப் பாடப்புத்தகம் வாங்குவதற்குச் செலவழிப்பதையும் தெரிவித்து விட்டாராம். எதிலும் நேர்மையாக இருக்க வேண்டும் என்பது அவர் எண்ணம்.

அருணாசலத்திடம் இக்கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ள ஆஸ்கார் ஒயில்டின் கருத்துரையைச் சொன்னேன். பதினான்கு ஆண்டுகள் சிறைக்குள் கழித்த அருணாசலம் கூறினார்: ''அந்தக் கருத்து சரிதாங்க; என்னைப் போல் விதிவிலக்குகள் அபூர்வம். சந்தர்ப்பச் சூழ்நிலையால் தவறு செய்து விட்டு வருபவர்களைச் சிறையில்

---

## அடுத்த வாரம்

# பல்லவன் கட்டண உயர்வு தேவையா?





-விழிப்படையச் செய்யும் புதிய தகவல்கள்

# இலவசமாகப் பெறுவீர்
## உடனடி சக்திதரும்
## க்ளூகோன்-டி® யுடன்




## கவர்ச்சியான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்பூன்

உடனடி சக்தி தரும் உங்கள் தினசரி பானத்தைக் கலக்க அருமையான வழி. 400 கிராம் க்ளூகோன்-டி பாக்கெட்டுடன் பிரகாசமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்பூனை இலவசமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்.

விட்டமின்-டியுடன் கால்ஷியம் மற்றும் பாஸ்பரஸினைக் கொண்ட க்ளூகோன்-டி புத்துணர்ச்சி தருவது, குளிர்ச்சியானது, சக்தி தருவது. பால், தேநீர், காபி, தண்ணீர் மற்றும் ஜூஸுடன் கலக்கியோ அல்லது அப்படியேயோ அருந்தலாம். க்ளூகோன்-டி யுடன் கிடைக்கும் இலவச ஸ்பூனைக் கொண்டு கலக்கிக் குடிக்கலாம்.



400 கிராம் பாக்கெட்டின்மேல் இலவசச் சலுகை பற்றிப் பாருங்கள்.




வரம்புக்குட்பட்ட இருப்பு: குறிப்பிட்ட விற்பனைத் தலங்களில் மட்டுமே கிடைக்கும்.

**உடனடி சக்தி பெற—க்ளூகோன்-டி®**

GLL-9686

தனியே வைக்கவேண்டும். தொழில் முறைக் குற்றவாளிகளுடன் அவர்களைச் சேர்த்து வைத்தால், கெட்டுப்போகிறார்கள். சொந்த காலத்தில் 'தொழில் நுணுக்கங்களை'ப்புதிய வர்கள் கற்றுக் கொள்கிறார்கள். அரசு இதைக் கவனித்து வழக்கமான குற்றவாளி களிடமிருந்து புதியவர்களைப் பிரிக்க வேண்டும்.''

'திருமணம் எப்போது?'

சி ரி க் கி றா ர். சிரிப்பில் சோகமே மேலோங்குகிறது. .

''சிறைக்குப் போனவன் திருந்துவான் என்னும் எண்ணம் மக்களிடையே இல்லை. அதனால் தற்போது திருமணத்தைப் பற்றி நினைக்கவில்லை. இப்போது என் இலட்சியம் வழக்கறிஞராகி பிறர் மதிக்க வாழவேண்டும். வறியவர்களுக்கு முடிந்த அளவு வாதாட வேண்டும் அவ்வளவுதான்.''

அருணாசலம் அயராத உழைப்பாளி. சட்டக் கல்லூரியில் மாணவராக இருப் பினும், மாலை நேரத்தில் பள்ளி மாணவர் களுக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்து ஓரளவு வருமானம் பெறுகிறார். என்றாலும் தன் பாடங்களையும் கருத்தோடு படிக்கிறார்.

'கல்கி வாசகர்களிடமிருந்து உங்களுக்கு ஏதாவது உதவி வேண்டுமா?' என்று விடை பெறுவதற்கு முன்பு இறுதி கேள்வியாகக் கேட்கிறேன்.

''வேண்டாங்க. அடி உதவுற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டாங்க. அடின்னு அடிக்கிற அடி இல்லீங்க. காலடி; நமது சொந்தக் காலடி. அவனவன் சொந்தக் காலடியை நம்பி — தன் காலிலே தான் நிற்கணும். பஸ் செலவுக்கு உதவி கிடைக்குது; சிறைச்சாலையிலே கல்சுரல் கமிட்டின்னு ஒண்ணு இருக்குங்க. அது என் சட்டப்படிப்புக்கு ஓரளவு உதவி செய்யுது. இன்னும் எல்லாத்துக்கும் பிறர் உதவி யையே நம்பிக்கிட்டு இருக்கக் கூடாதுங்க.''

பழமொழிக்குப் புது விளக்கம் கொடுத்துச் சிரிக்கிறார். இந்தப் பதிலே அருணாசலத்தின் உள்ளத்தைத் தெள்ளத் தெளியக் காட்டு கிறது.

அருணன் என்றால் சூரியன். அசலம் என்றால் மலை. அருணாசலம் ஒரு கல்விக் கதிரவன்! நிலையில் திரியாது நிமிர்ந்து நிற்கும் நம்பிக்கை மலை!

பேட்டி: **பூவண்ணன்**

---

# மௌனமான நேரம்

எஸ். சுந்தரராஜ்

**எ**னது டிஜிட்டல் கடிகாரத்தில் மணி ஏழு ஆகியிருந்த போது திருப்பத்தூரின் எல்லைப்புற பஸ் ஸ்டாப்பை அடைந்திருந் தேன். காலை வேளையானதால் அதிக க்கூட்ட மில்லை. என் பக்கத்தில் ஓர் இளைஞன். ஒரே ஒரு இளைஞனைத் தவிர. சிறிது நேரத்தில் கையில் ஒரு பையுடன் ஆஜானுபாகுவான ஒரு தாடிக்காரரும் வந்து சேர்ந்தார்.

மதுரை பஸ், வராமல் எனது பொறு மைக்குச் சவால் விட்டுக் கொண்டிருந்தது. நிமிடங்கள் யுகங்களாகத் தெரிந்தன. புதிய நபர், வாலிபனருகில் வந்தார். ஏறிட்டுப் பார்த்தேன் அவர்களை. தாடி மனிதர் எதற்கோ தயங்கினார். பின்னர் இளைஞனிடம் கேட்டார்.

''கா... காரை... க்... கு... குடிக்...கு எ... த்த... னை மணி... க்கு ப....பஸ்''— இக்கித் திணறிக் கேள்வியைக் கேட்டு முடித் தார்.

இளைஞன் பதிலே சொல்லவில்லை.

மறுபடியும் கேட்டார் அந்தத் தாடிக் காரர்.

''கா.. கா... காரைக்... குடிக்...கு எ... எ... எத்தனை மணிக்கு ப...பஸ்''

இம்முறையும் இளைஞன் மௌனமே சாதித்தான்.

ஏமாற்றமும் எரிச்சலும் போட்டியிட்டன, கேட்டவரின் முகத்தில். நகர்ந்து நின்றார் வருத்தம் பிரதிபலிக்க. இக்கித் திணறிக் கேட்ட அம்மனிதருக்குப் பதிலளிக்காமல் நின்ற அந்த இளைஞனின் திமிர்ப் பிடித்த போக்கு எனக்குள் ஆத்திரத்தைத் தோற்று வித்து விட்டது.சே! என்ன மனிதன் இவன்?

நினைத்துக் கொண்டிருந்த போதே காரைக் குடி செல்லும் பஸ் வரவே அந்தத் தாடிக் காரருக்குச் சமிக்ஞை கொடுத்தேன். அவ ருடன் பஸ் புறப்பட்டது.

நிமிடங்கள் நகர்ந்தன. இளைஞன் இப் போது என்னை நெருங்கி வந்தான். தயக்கத் துடன் கேட்டான். இ... இ... இப்போது மணி எ... எ... எ... ன்ன?'' பளீரென எனக்குள் மின்னல் வெட்டியது. இந்த இளைஞன் தாடி மனிதருக்குப் பதில் சொல்லி யிருந்தால் என்ன நடந்திருக்கும் என்பதை மனக்கண் முன் கொண்டு வந்தேன். ஒரு தகராறு தவிர்க்கப்பட்டு விட்டது. அதற்கு உதவி புரிந்த அந்த இளைஞனின் சமயோசித மௌனத்தை எண்ணி வியந்தேன்.







# மண் சோறு

ஒரு அண்ணன் — ஒரு தங்கை. (வெய்ட் ப்ளீஸ் — பாசமலர், அன்புக்கரங்கள், தங்கைக்காக, தங்கை என்று லிஸ்ட் போடாதீர்கள். இது நடுவில் வேறு விதமாய்த் திரும்பும் டைப்)

பாசமென்றால் பாசம், பாசமலர் பாசம் ('நீ மட்டும் உப்பில்லாமல் சாப்பிடும் போது நான் மட்டும் எப்படி உப்பும் உறைப்புமா சாப்புடறது அண்ணா?') நடுவில் ஒரு வில்லன். தங்கைமேல் ஆசை வைக்கும் வில்லனை (ஒரு கற்பழிப்பு ஸீன்— கடைசி நிமிடத்தில் கற்பழிப்பு ஸீனை வாபஸ் வாங்கியிருக்கிறார்கள்.) கொல்லும் அண்ணன். பிணத்தைத் தோட்டத்திலேயே புதைத்து விட்டு, தங்கையின் திருமணத்திற்கு மூச்சு முட்டப் பாடுபடுவது கல்யாணம் ஆன கையோடு போலீஸுக்குப் போவது. கொலை செய்தி — போலீஸ் விசாரணை — கோர்ட் — வில்லன் நாட்டுத் துரோகி என கோர்ட் சொல்லுதல் — அண்ணன்காரனை விடுதலை செய்கிறார்கள்.

தலைப்பு சும்மா ஒரு உளுஉளாக்கட்டிக்காக வைத்திருக்கிறார்கள்.

தோட்டத்தில் ஜோர் மழை. மண் கரைகிறது கொஞ்சம் கொஞ்சம். பிணம் வெளிப்படுகிறது கொஞ்சம் கொஞ்சமாய். மாப்பிள்ளை இன்ஸ்பெக்டர் கைகழுவ அதே தோட்டத்திற்குப் போகிறார். இந்த ஸீன் செம்மை பில்ட் அப். கடைசியில் தடார் என்று சுவர் சரிந்து விழுந்து கதாநாயகனைக் காப்பாற்றுகிறது. அப்புறம் அந்தக் கோழிக் குஞ்சு, பருந்து, வேரை வெட்டும் ஏட்டு, வீட்டு ஆள் என்று அங்கங்கே நெஞ்சைப் படபடக்க வைக்க முயற்சி செய்திருக்கிறார்கள். இருந்தாலும் இன்ஸ்பெக்டர் ஒவ்வொரு முறை வரும் போது தான் இப்படி நடக்க வேண்டுமா என்ன?

அண்ணன் தங்கை வில்லன் என்று ஒரு நேர்க்கதை இருக்கும் போது சங்கிலி முருகன் சாராய பாட்டில் என்று ஒரு புறக்கதை எதற்கு? அது இல்லாமல் இருந்திருந்தால் பணத்திற்குப் பணம் மிச்சம். பார்க்கிறவர்களுக்கு நேரம் மிச்சம்.

முதலில் ஜாதி, ஜாதி, ஜாதியே என் உயிர் மூச்சு என்று சொல்லும் மனோரமா தன் மகளைப் பாத்திரக்காரன் ஒருவன் வசியப்படுத்திய விவரம் தெரிந்ததும் 'ஜாதி ஆதியில இல்ல, பாதியில வந்தது' என்று பிளேட் திருப்பும் மனோரமா கலகலப்பிற்கு.

எந்த முகம் ஏமாறும் முகம் என்று கணக்குப் பார்த்து மோகன் ராஜபாளையம் நாய் மாதிரி மூச்சை இழுத்துக்கொண்டே இருந்து காரியம் சாதிக்கிறாரே நல்ல வேடிக்கை. சமூகத்தை, கன்றுக்குட்டி முன்னுனில் ஒரு நாள் ஏற்கெனவே கேட்டாகி விட்டது என்றாலும் புன்முறுவ வைக்கிறது.

சுலக்‌ஷணா சும்மா டூயட் பாடியிருக்கிறார். பாண்டியன் அங்கங்கே பாவம் காட்டுகிறார், சண்டை போடுகிறார். நிழல்கள் ரவி வில்லன், பரவாயில்லை. சசிகலா தங்கைக்காரி. முகம் களையாய் இருக்கிறது.

இன்ஸ்பெக்டராக டாக்டர் ராஜசேகர். அறிமுகம் என்று டைட்டில் போடுகிறார்கள். புதுமைப் பெண் முந்திக் கொண்டு விட்டது.

ஏட்டு தங்கவேலு பார்த்தும் பார்க்காத மாதிரி இருந்து கொண்டு 'தட்'டியைக் கடிக்காதம்மா ஆணி குத்தும்' என்பது என்ன இருந்தாலும் அனுபவம் மிக்க ஆசாமி இல்லையா என்று சொல்ல வைக்கிறது. அவ்வளவு இயல்பாய்ச் செய்கிறார் மனிதர்.

மொத்தத்தில் தேவலாம் ரகம்.



# நானே உனது நாள்

குடித்து விட்டுத் தள்ளாடும் கோபால கிருஷ்ணன். ஜாடை காட்டும் ராம்தாஸ். 'விர்' என்று சீறிப் பாய்ந்து கோபால கிருஷ்ணனை 'காலஞ்சென்ற' கோபால கிருஷ்ணனாக மாற்றும் மோட்டார் ராக்ஷஸன். ராம்தாஸின் எக்காளச் சிரிப்பு. அடங்குவதற்குள் மழைக் கோட்டு, துப்பாக்கி சகிதம் 'நண்பர்' வந்து டுப்டுப் என்று சுடுதல். அப்புறம் டட்டடய்ங் என்று சங்கீதம் இசைத்து விட்டு கும்நாம் என்று— ஸாரி — நானே உனது நாள் என்று பெயர் காட்டுகிறார்கள். நல்ல ஆரம்பம் தான்.

ஒரு பெயர் தெரியாத, ஆள் அரவமற்ற தீவு மாதிரியான இடத்தில் வந்து சிக்கும் ஏழு பேர்கள்; உடன் ஒரு சக பைலட். ஒருவர் பின் ஒருவராகக் கொல்லப்படுகிறார்கள். கடைசி ரீலுக்கு முந்திய ரீலில் இன்னார் தான் கொலைகாரன் என்று சொல்கிறார்கள்.

இது கதை: மற்றபடி தமிழ்ப்படவுலகில் மற்றுமொரு திகில் முயற்சி.

தீவில் இறங்கியவுடன் அர்த்தமில்லாமல் ஒரு சண்டை. அதுவும் இரண்டு ரீல் நீளத்திற்கு. ஜோ என்று மழை பொழிய நாயகனும், நாயகியும் ஓட, நடுவில் நாயகி கால் தடுக்கி விழ, தடுக்கி விழுந்தது ஒரு கொலையுண்ட பிணத்தின் மீது என்று மூளைக்குச் செய்தி போய், மூளை கத்து என்று ஆணையிட்டு நாயகி மிக மைல்டாகக் கத்துகிறார். ஆனால் அந்த ஸிசுவேஷன் படு அமர்க்களம். மர்மப்பாட்டின் பின்னணியில் கனவாய், வழியாய் கதைமாந்தர் அலைகிற போதும், அந்த இருண்ட பங்களாவின் குகை அமைப்புக்களில் துரத்தப்பட்டு ஓடும் போதும் 'அலை அலை' என்று பாட்டுக்கு முன்பு ஒரு பெரிய அலை ஒரு பெரிய ஒற்றைப் பாறையை அறைந்து தழுவும் போதும் — சும்மா சொல்லக் கூடாது; காமிரா விளையாடியிருக்கிறது (மிக நன்றாக). காமிராக்காரர் கணேசபாண்டியனுக்கு ஜே!

விஸ்கி டப்பாவை மூச்சுக்கொருதரம் காலி செய்து, பாதி சிகரெட்டைப் பிய்த்து விட்டு மீதி சிகரெட்டை வாயில் பொருத்திக் கொள்ளும் ஜெய்யும் சரி, ஒரு கையில் தீவட்டியும், மறு கையில் உணவுப் பாத்திரமுமாய் நட்ட நடு இரவில் கிளம்பும் மனோரமாவும் சரி— உறுத்தாத நடிப்பு.

ஆனாலும் — ஆரம்பத்தில் மனோரமா கோர்ட்டில் லிஸ்ட் போட்டு ஒவ்வொரு பெயராய் அடித்து விட்டுக் கடைசியில் ஸேம் ஸைட் கோல் போடுகிற மாதிரி வில்லனை எதிர்க்கக் கதாநாயகனுக்கு உதவுகிறாரே— சதுரப் பெட்டிக்குள் வைத்த கோளம் மாதிரி பொருந்தவே மாட்டேன் என்கிறது. ஆளே இல்லாத தீவில் அவர் மட்டும் எப்படி வந்தார்? ஏன் வந்தார்? டைரக்டர் ஸார், இலவச இணைப்பாய் ஏதாவது இரண்டு ரீலுக்கு இன்னொரு படம் காட்டப்போகிறீர்களா என்ன? கனவு என்று காட்டுகிறீர்களே ஒரு ஸீன் — நளினி ஓடுவது, படகில் ஏறி வெகு பிரயத்தனம் செய்து நீரில் மிதப்பு கிளவுஸ் கரம் கழுத்தைப் பிடிப்பது அப்பாடியோவ்! அடிவயிற்றில் திகிலைச் செருகிச் செருகி எடுக்கிறது.

முதலில் பாதம் வைத்து, பின் ஒரு சின்ன இழுப்பு இழுத்துத் துள்ளித் துள்ளி ஓடும் அகல்யா, பிகினியில் ஜில்லென்று வரும் அகல்யா; ஜெய்யுடன் மிதமான சரசத்தில் ஈடுபடும் அகல்யா; ஸ்ராமருக்கு ஒரு அகல்யா என்று சொல்ல வைத்து விடுகிறார்.

நளினிக்குக் கூடிய விரைவில் 'திகில்பட திலகம்' பட்டம் வந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

இளையராஜா ரீரெகார்டிங் சூரப்புலி என்று நினைத்திருந்ததை வாபஸ் வாங்கச் செய்து விட்டார். எவ்வளவு வாய்ப்பு இந்தப் படத்தில், இதயத்தை ஆட்டம் காண வைக்க வேண்டாமோ?

மற்றபடி பாடல்கள் கவர்ச்சிக் கவசம் பூண்டவை. அதிலும் அந்த வெண்ணிலா பாட்டு அந்த நாள் விஸ்வநாதன் — ராமமூர்த்தியை நினைவு படுத்தினாலும் — அந்தக் காரணத்தினாலேயே அடிக்கடி நினைவுகூரப்படும்.

இன்னார்தான் கொலைகாரன் என்று தெரிகிற போது காரமேயில்லாத மிளகாய் பஜ்ஜியைச் சாப்பிட்ட மாதிரி இருக்கிறது. அப்புறம் ஒற்றைத் தோட்டாவுடன் அலைவது (சரியான இழுவை) கதாநாயகன் உயிர் போகிற நேரத்தில் தப்பித்து வில்லனை வேட்டையாடுவது, ஆகியன க்ளைமாக்ஸுக்குப் பின்னால் ஒரு ஆன்ட்டி க்ளைமாக்ஸ்.

— ஜெயமன்மதன்


















தஞ்சை பெரிய கோவிலுக்குள் ராஜராஜன் சிலையை வைக்கும் காலம் வந்தே தீரும் – கருணாநிதி பேச்சு



# கல்கி

1984 செப்டம்பர் 23
மலர் : 43 இதழ் : 8
ரக்தாக்ஷி புரட்டாசி 7




## வெட்கம்! வெட்கம்! வெட்கம்!

இருதய அறுவை சிகிச்சைக்காக அமெரிக்கா சென்று பலவீனமான நிலையில் திரும்பிய என். டி. ராமராவின் முதுகில் குத்திய பாஸ்கரராவின் துரோகத்தை விடவும் கேவலம் ஒன்று உண்டென்றால் அது ஆளுனர் ராம்லால் என். டி. ஆரை டிஸ்மிஸ் செய்ததுதான்.

இதைவிடவும் வெட்கக்கேடான விஷயம் பாஸ்கரராவுக்கு மெஜாரிட்டி நிரூபிக்க ஒருமாதம் அவகாசம் தந்த ராம்லால் என். டி. ஆருக்கு மூன்று நாள் தவணை தர மறுத்தது.

இதைக் காட்டிலும் மானக் கேடான காரியம் ஆந்திரத் தலைநகரில் நடப்பதெதுவும் தமக்குத் தெரியாது என்று நாடாளுமன்றத்தில் பிரதமர் கூறித் தப்பிக்கப் பார்த்ததும் அதேசமயம் ஆளுனரின் செயலை நாடாளுமன்றத்தில் உள்துறை அமைச்சர் நியாயப்படுத்த முயன்றதும்.

இதைக் காட்டிலும் அக்கிரமம் ஒன்று உண்டென்றால் அது, புதிதாக ஆளுனர் பதவி ஏற்ற எஸ். டி. சர்மா முந்தைய கவர்னரை விடவும் மோசமாக நடந்து கொண்டு, மைனாரிடி அரசின் முதல்வர் தமது அமைச்சரவையை விஸ்தரித்துக் கொள்ள உதவியதுதான்.

இதைவிடவும் மட்டமான விஷயம் ஆந்திராவில் என். டி. ஆர். பதவி இழந்ததற்கு அக்கட்சியில் உட்பூசலே காரணம் என்று பிரதமர் பொதுக் கூட்டங்களில் பூசி மெழுகி வருவதாகும்.

இதைக்காட்டிலும் மோசம் பாஸ்கரராவின் மைனாரிடி அரசு, எம்.எல். ஏக்களுக்கு வீட்டுமனை, மாணவர்களுக்கு அதிக மார்க், என்றெல்லாம் புதுப்புது சலுகைகளை அவசரம் அவசரமாக அள்ளி வழங்கி மக்களுக்கும் குட்டித் தலைவர்களுக்கும் ஆசை காட்டுவதாகும்.

இதைக் காட்டிலும் மிருகத்தனமான போக்கு, 'சட்டசபையில் மெஜாரிட்டி நிரூபித்து விடுவாயா பார்க்கலாம்' என்பது போல் கலாட்டா செய்தும், மைக்கைப் பிடுங்கி அடித்தும், எழுத்தில் வடிக்க முடியாத கெட்ட வார்த்தைகளால் திட்டியும் ரௌடித்தனமாக பாஸ்கரராவ் கட்சியினர் நடந்து கொண்டு சட்டசபை கூட்டமே நடக்க முடியாமல் செய்ததாகும்.

இதைவிடவும் வெட்கக்கேடான காரியம் என். டி. ஆர். மீது ஆர். எஸ். எஸ்., ஸி. ஐ. ஏ. புரளிகளைச் சுமத்தி, அவர் வீட்டிலும் ஸ்டுடியோவிலும் போலீஸ் ரெய்ட் நடத்தி அச்சுறுத்தப் பார்ப்பதாகும்.

இதைக்காட்டிலும் படுமட்டமான அம்சம், பதவி ஆசை பணத்தாசை காட்டியும் ஈர்க்க முடியாது போன எம். எல். ஏக்களை 'என்.டி.ஆர். சிறை வைத்திருக்கிறார்' என்ற அவதூறைக் கிளப்புவதாகும். பணம் — பதவி பெற்றுக் கொண்டு பாஸ்கரராவ் பக்கம் சேர்ந்தால்தான் அவர்கள் சுதந்திரமாக இருப்பதாக நம்புவார்கள் போலும்!

இந்த அநீதிகளுக்கெல்லாம் சிகரமான ஒன்று இத்தனை அதர்மங்களுக்கும் பிரதமரும், அவரது கட்சியும் துணை போனதாகும். இவ்விதழ் அச்சேறும்போது வந்த கடைசி செய்தியின்படி பாஸ்கரராவ் ராஜினாமாவைத் தொடர்ந்து என். டி. ஆர். மறுபடி முதல்வராகி ஒரு மாதத்துக்குள் பெரும்பான்மை நிரூபிக்குமாறு ஆளுனரால் கோரப்பட்டுள்ள போதிலும் குருக்ஷேத்திரத்தில் போர் ஓய்ந்து விட்டதாக நினைப்பதற்கில்லை. என். டி. ஆரைப் பழிவாங்குவதாகக் கறுவிக் கொண்டு எம். எல். ஏக்களை ஈர்க்கும் முயற்சி முன்னிலும் தீவிரமடையும்.

இந்திய ஜனநாயகத்துக்கு விழுந்த கத்திக்குத்து அழுத்தமான வடுவை உண்டாக்கியுள்ளது. ரணம் ஆறினாலும் வடுவைச் சரித்திரம் காட்டிக் காட்டிக் கொண்டே இருக்கும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# மூலக் கனல்

நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 24

அவனை இலாகா இல்லாத மந்திரியாக்கி விட்டிருந்தார்கள். மாதக் கணக்கில் அவன் மருத்துவமனையில் கிடந்ததனால் அவனிடமிருந்த தொழில் வளர்ச்சி இலாகாவுக்கு வேறொரு புதிய மந்திரி நியமிக்கப்பட்டுப் பதவி ஏற்றிருந்தார். அன்று காலையில் தான் அந்தப் புது மந்திரிக்கு ராஜ்பவனில் கவர்னர் பதவிப் பிரமாணம் செய்து வைத்திருந்தார். அந்தச் செய்தி வெளியான மாலைத் தினசரியுடன் தான் கன்னையா இருவைச் சந்திக்க வந்திருந்தான். டாக்டர்களோ, நர்ஸோ அருகில் இருந்திருந்தால், 'மனத்தையும், உடல் நிலையையும் பாதிக்கக் கூடிய இந்தத் தகவலை அப்போது இருவுக்குத் தெரிய விடக்கூடாது என்று கன்னையாவைத் தடுத்திருப்பார்கள். அவர்கள் யாரும் அருகில் இல்லாதது கன்னையனுக்கு வசதியாக இருந்தது.

தனது கட்சியில் தனக்குத் தெரியாமல் தன்னைக் கலந்து ஆலோசிக்காமல் இப்படி ஒரு முடிவெடுத்தது இருவுக்குப் பெரிய அதிர்ச்சியாயிருந்தது. ஒருவேளை தான் எழில் ராஜாவைக் கொல்ல முயன்ற ஏற்பாடு இரகசியப் போலீஸ்மூலம் முதல்வருக்குத் தெரிந்து அதை வெளியே சொல்லாமல் தன்மேல் இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்குமோ என்று கூடச் சந்தேகமாயிருந்தது இருவுக்கு. தான் இல்லாமல் தன்னைத் தவிர்த்துவிட்டு இயங்க முடியும் என்று கட்சி மேலிடம் முடிவு செய்ததே அவனுக்குப் பொறுக்கவில்லை. கோபுரத்தைத் தானே தாங்குவதாக அதில் இடம் பெற்றிருக்கும் ஒவ்வொரு பொம்மையும் நினைக்கலாம். ஆனால் எந்தப் பொம்மை விழுவதனாலும் கோபுரம் எதுவும் ஆகாது. இந்த உவமையை இதே பொருள் வீச்சுடன் பலரைக் கட்சியிலிருந்து வெளியேற்றிய போதும், வேறு சிலர் தாமாக வெளியேறிய போதும் அவனே மேடைகளில் கூறியிருக்கிறான். இன்று தனக்கே இந்த உவமையை நினைத்துப் பார்க்கும் போதும் ஒப்பிட்டுக் கொள்ளும் போதும் என்னவோ போலிருந்தது. கட்சியிலிருந்து தானே பலரை வெளியேற்றியது போக இப்போது தன்னையே வெளியேற்ற முயற்சி நடப்பதை எண்ணுவது சிரமமாகத்தான் இருந்தது. தான் வீழ்கிறோமா அல்லது வீழ்த்தப்படுகிறோமா என்பது அவனுக்கே புரியாமல் இருந்தது. தோல்விகளின் போது தளராமல் நிமிர்ந்து நிற்கவும் வெற்றிகளின் போது துள்ளாமல் அடங்கி இருக்கவும் மனப்பக்குவமும் பயிற்சியும் வேண்டும். சின்ன உடையாரிடம் இருந்த அந்தப் பக்குவம் தன்னிடம் இல்லாதது இருவுக்கே இப்போது புரிந்தது. சிறு வயதில் தன்னை 'பாஸ்டர்ட்' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கொச்சையாகத் திட்டுகிற அளவு பக்குவமற்றிருந்த அதே சின்னக் கிருஷ்ண ராஜன்தான் இன்று இப்படிப் பரந்த மனத்தோடு பக்குவமாகப் பண்பட்டிருக்கிறான் என்பதை நம்பக் கூட முடியாமல் இருந்தது. வசதிகள் விசாலமான அளவு தன் மனம் விசாலமடையவில்லை என்பதை அவன் தனக்குத்தானே இப்போது உணர்ந்தாக வேண்டியிருந்தது.

இந்த எல்லா இழப்புக்களுக்கும் வேதனைகளுக்கும் நடுவே ஒரே ஒரு மகிழ்ச்சி தன் மகனைப் பற்றியதாக இருந்தது. அவன் உயிர் பிழைத்து விட்டான் என்பது இருவுக்குப் பெரிய ஆறுதலையும் நிம்மதியையும் அளித்திருந்தது. எதற்கும் அஞ்சாத நேர்மை வீரனாகிய தன் மகனின் திறமையால் தானே பெரிதும் பாதிக்கப்பட்டவனாக இருந்தும் அவன் தன் மகன் என்ற பெருமிதமே இப்போது அதிகமாக இருந்தது. குணத்தில் அவன் தன் மனைவி சண்பகத்தின் சாயலோடு அவனைக் கொண்டு பிறந்திருந்தாலொழிய அவனிடம் இத்தனை நேர்மைப்பிடிவாதம் அமைந்திருக்க வழியில்லை என்பதையும் இருவின் உள்ளமே ஒப்புக்கொண்டது இப்போது. அவ்வளவு நேர்மைப் பிடிவாதம் உள்ள அவன் சர்மாவின் வேண்டுகோளுக்கு இணங்கித் தன்னைப் பார்க்க வருவானா என்பது பற்றி இன்னும் இருவுக்குச் சந்தேகமாகவே இருந்தது. அவன் தன்னைப் பற்றிப் பத்திரிகையில் எழுதியிருந்த கட்டுரைகளின் கடுமையான வாசகங்கள் ஒவ்வொன்றாக நினைவு வந்தன. தன்னுடைய மைத்துனன் மூலம் தான் யார் என்ன உறவு வேண்டும் என்பதை எல்லாம் தெரிந்து கொண்ட பின்பு தான் இதை எல்லாம் அவன் எழுதினானா அல்லது தான் யாரென்று தெரியாமலே எழுதினானா என்று யோசித்தான் இரு. சண்பகமும் தன்னுடைய மைத்துனனும் அவனை அத்தனை நேர்மையாளனாக வளர்த்து ஆளாக்கியதற்காக அவர்களை இப்போது உள்ளூறப் பாராட்டினான் அவன். தன் மகன் தன்னிடம் வளர்ந்திருந்தால் கூட இப்படி வளர்த்திருக்க முடியாது என்பது இப்போது அவனுக்கே புரிந்தது. மகனைப் பற்றிய பற்று பாசம் இவற்றைத்தான் இப்போது அவன் வெளிக் காட்டிக் கொள்ள முடித்

ததே ஒழிய அவனைக் கொல்வதற்குத் தானே பணம் கொடுத்துக் கூலிப் பட்டாளத்தை ஏவினோம் என்பதைப்பரம இரகசியமாக மனத்துக்குள்ளேயே புதைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. நல்லவேளையாக அது திருவுக்கும் இன்னும் ஒரே ஓர் ஆளுக்கும் தான் தெரியும். அந்த ஓர் ஆள் தான் அந்தக் கொலையைச் செய்வதாக ஒப்புக் கொண்டு போனவன். அவன் இந்தத் தொழிலில் நிபுணன். பிடிபடமாட்டான்! 'பிடிபட நேர்ந்தால் தலையேபோனாலும் உங்கள் பெயர் வெளியே வராது' —என்று திருவுக்கு வாக்களித்திருந்தான். இப்போது டாக்டர், சர்மா எல்லோரும் பத்திரிகையாளன் எழில்ராஜா உயிர் தப்பி விட்டான் என்று கூறுவதிலிருந்து — அவனைக் கொல்ல முயன்றவர்களைப் பற்றித் தடயம் எதுவும் போலீஸாருக்குக் கிடைக்கவில்லை என்று தெரிந்தது. கிணற்றில் போட்ட கல் மாதிரி அந்த விஷயம் ஆழத்தில் அமுங்கிக் கிடந்தது. பத்திரிகைகளில் அதைப்பற்றிய செய்திகளே எதுவும் இல்லை.

இன்று தன்னைப் பற்றிய 'கேரக்டர் அஸாஸினேஷனை' தினமும் பொறுத்துக் கொள்ள முடியாமல் அதை எழுத்து மூலம் செய்து கொண்டிருந்தவனையே தீர்த்துக் கட்ட ஏற்பாடு செய்த தானே இளமையில் பேச்சு மூலமும் எழுத்து மூலமும் எவ்வளவு பெரியவர்களைப் பற்றி எத்தனை முறை எத்தனை எத்தனை விதமாகக் 'கேரக்டர் அஸாஸினேஷன்' செய்திருக்கிறோம் என்பது திருவுக்கு இப்போது நினைவு வந்தது. தனது கொள்ளுப் பேத்திகளாக வேண்டிய வயதுள்ள பெண்களைக் கைத்தாங்கலாக உடனழைத்துக் கொண்டு பிரார்த்தனைக் கூட்டத்துக்கும் உலாவவும் சென்ற அமரர்தேசத்தந்தை காந்தியடிகளைப்பற்றியே ''காந்தியார் கட்டிளங் குமரிகளின் தோள் மேல் கைபோட்டு நடக்கிறார்'' என்றுதான் எழுதியது நினைவுக்கு வந்தது. நேருவைப் பற்றியும்அப்படி எழுதியது நினைவுக்குவந்தது. அவர்களோ, அவர்கள் சார்ந்திருந்த இயக்கமோ அப்படி எல்லாம் எழுதியதற்காகத் தன்னைக் கொலை செய்து தீர்த்துக் கட்டிவிட ஆள் ஏவியிருந்தால் என்ன ஆகியிருக்கும் என்பதையும் சேர்த்தே இப்போது திரு நினைத்தான். இளமையில் தன்னை அரண்மனையிலிருந்து வெளியே துரத்தி அடித்துப்



போட்டு விட்டார்கள் என்பதற் இதே எழிலிருப்பு ஜமீன் குடும்பத்துப் பெண்களையும், ஆண்களையும் பற்றிப் பின்னால் தான் எவ்வளவு தாறுமாறாக எழுதியும், பேசியும் இருக்கிறோம் என்பதை எல்லாம் கூட நினைத்துப் பார்த்தான். அவற்றிற்காக அவர்கள் தன்னைப் பழிவாங்க முயன்றிருந்தால் தானே இப்போது உயிரோடு இருந்திருக்க முடியாதென்றும் தோன்றியது. முதலில் தன்னை அரண்மனையிலிருந்து துரத்தி அடித்துப் போட்டதே ஜமீன்தாருக்குத் தெரிந்து நடந்ததோ அல்லது 'இப்படி எல்லாம் செய்தால் ஜமீன்தாருக்குப் பிடிக்கும்'- என்று ஜமீன் அடியாட்களே தாங்களாகத் திட்டமிட்டுச் செய்தார்களோ என்று கூட இந்த நிமிடம் வரை திருவுக்கு அந்தரங்கமாக ஒரு சந்தேகம் உண்டு. ஏனென்றால் ஜமீன்தார் இப்போது அவனிடம் நடந்து கொள்ளும் பக்குவத்தைப் பார்க்கும்போது இந்த மனிதரிடம் வைரம் வைத்துக் கொண்டு ஆட்களைப் பழிவாங்கும் மோன குணம் இருந்திருக்க முடியும் என்று நம்பக் கூட முடியாதபடி இருந்தது. சகிப்புத் தன்மையும், நிதானமுமே கலாசாரத்தின் அடையாளங்கள். வன்முறையும், ஆத்திரமும் கலாசாரமின்மையின் அடையாளங்கள். காட்டுமிராண்டித் தனத்தின் அடையாளங்கள் என்று இன்று பின்னால் திரும்பிப் பார்க்கும் போது அவனுக்குத் தோன்றுகிறது.

இருவின் வீட்டில் தாண்டவராயன் தம் கம்பெனி செலவில் இரண்டு மூன்று அறைகளை ஏர்க் கண்டிஷன் செய்திருந்தார். தொழில் வளர்ச்சி இலாகா இருவிடம் இருந்து எடுக்கப்பட்டுப் புதுமந்திரி பதவி ஏற்று அவன் இலாகா இல்லாத வெறும் மந்திரியான தினத்தன்று மாலையிலேயே தாண்டவராயனின் ஆட்கள் வந்து அந்த ஏர்க்கண்டிஷன் ஏற்பாடுகளை எடுத்துச் சென்று விட்டதாக உதவியாளன் கன்னையா இப்போது தெரிவித்தான். 'அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைகள்' — என்ற பழமொழி தான் நினைவுக்கு வந்தது. தத்துவப்பார்வை, ஆன்மீகக் கனிவு, எதுவும் இல்லாத காரணத்தால் வாழ்வின் இறங்குமுகமான போக்கை அவனால் ஏற்கவோ, சகித்துக கொள்ளவோ முடியாமல் இருந்தது. கட்சி மேலிடத்திலோ, மந்திரிகள் மட்டத்திலோ, சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்களிலிருந்தோ அவனைத் தேடி வந்து சந்திப்பது இப்போது படிப்படியாகக் குறைந்து போய் விட்டது. பழமில்லாத மரத்தைப் பறவைகள் நாடி வருவதில்லை. சர்மாவும், நீண்ட காலமாக உடனிருக்கும் உதவியாளன் கன்னையாவும் மட்டுமே இப்போது அவனுடைய கண்களில் அடிக்கடி தென்பட்டுக் கொண்டிருந்தார்கள். இனி அவனால் யாருக்கும் கெடுதல் செய்ய முடியாது என்று தெரிந்தவுடன் அதுவரை அவனுக்குப் பயந்து நன்மைகளைச் செய்து கொண்டிருந்த கூட்டம் ஒதுங்கிப் போய் விட்டது. வேண்டாதவனுக்குக் கெடுதல்களும், வேண்டியவனுக்கு நன்மைகளும் செய்ய முடியாதபடி யாராவது பதவியிலிருந்தால் அப்படிப் பதவியிலிருப்பவனை யாருமே பொருட்படுத்துவதில்லை. வேண்டியவர்களும்

---

## அருள்வாக்கு

ஸூர்யோதயத்துக்கு முந்தைய மூன்றே முக்கால் நாழிகை (ஒரு நாழிகை என்பது 24 நிமிஷம்) க்குப் பிராதக் காலம் என்று பேர். அருணோதயம் என்றும் சொல்வதுண்டு. அந்தக் காலத்தில் பச்சை ஜலத்தில் குளிப்பதற்கு பிராத ஸ்நானம் என்று பெயர். ஆற்றில், குளத்தில் செய்தாலும் சரி அகத்தில் மொண்டு விட்டுக் கொண்டு செய்தாலும் சரி, தலைக்கும் ஜலம் விட்டுக் கொள்ள வேண்டும். (தலைக்குத் தினமும் ஜலம் விட்டுக் கொள்வது ஸ்திரீகளுக்கு அவசியமில்லை. விரத தினம் பித்ரு தினம் தவிர மற்ற நாட்களில் அவர்கள் தலைக்கு மஞ்சள் ஜலம் ப்ரோக்ஷித்துக் கொண்டாலே போதும்.) பொதுவாகத் தலையோடு கால் பச்சை ஜலத்தில் காலங்கார்த்தாலேயே குளித்து விட வேண்டும். இதன் த்ருஷ்ட பலன், அதாவது ப்ரத்யக்ஷ விளைவு முதலாவதாக தேஹ சுத்தி. உடம்பின் அழுக்கு போகிறதென்று நேரே தெரிகிறது. அதோடு அந்த வேளையில் குளித்து விடுவதால் தூங்கு மூஞ்சித்தனம், சோம்பல் எல்லாம் போய், உத்ஸாஹமும் சுறுசுறுப்பும் உண்டாகின்றன. புத்தித் தெளிவும் ஏற்படுகிறது. இன்னம் மெடிகல் ஸயன்ஸ்படி சொல்லும் போது இந்தப் பிராத ஸ்நானத்தினால் நரம்பு மண்டலமே உறுதியடைந்து இப்போது 'நெர்வஸ் டிஸீஸ்' என்று பல ரூபத்தில் பரவி வருவதெல்லாம் க்ஷீணித்து விடும் என்கிறார்கள். அந்த வேளையில் ஸ்நானம் செய்வது உணர்ச்சிகளையும் குளிரப் பண்ணிச் சமனமாக்குகிறதென்பது இதன் ஸைகலாஜிகல் எஃபெக்ட்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்




காதல்


விருவிருப்பான சம்பவங்கள்


வீரம்


புதுமையான கதாபாத்திரங்கள்


மர்மம்


சுவை கூட்டும் கதைக் களம்


உருக்கம்


எழில் கொஞ்சும் எழுத்து நடை

இன்னும் ஒரு சரித்திரத் தொடர்கதைக்குத் தேவையான
அனைத்தையும் உள்ளடக்கி

# ஸ்ரீ வேணுகோபாலன்
எழுதும்
# மகத்தான சரித்திர நாவல்

# கல்கி
## தீபாவளி சிறப்பிதழில்
ஆரம்பம்

மற்றும் பல புதிய அம்சங்கள்

அதிக பக்கங்கள் * அதே விலை

அலட்சியம் செய்வார்கள். வேண்டாதவர்கள் இலட்சியமே செய்ய மாட்டார்கள். இந்த அளவுக்குப் பதவிகளை நாற்றமெடுக்கச் செய்தது யார் என்று நினைத்த போது திருவுக்கு அவமானமாக இருந்தது. தான் கொள்ளையடித்ததைத் தனக்கு உதவிய — உதவிக் கொண்டிருக்கும் சகதிருடர்களோடு பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்று கொள்ளையை முறைப்படுத்துவது போல் பதவியை முறைப்படுத்தியவர்கள் யார் என்று எண்ணிய போது அவனுக்குக் கூச்சமாயிருந்தது.

இன்று இதற்கெல்லாம் பாவ மன்னிப்பு என்று எதுவும் இருப்பதாகப் படவில்லை என்றாலும் இவற்றைத் திரும்ப நினைக்கவும் பிடிக்கவில்லை, நினைக்காமல் தவிர்க்கவும் முடியவில்லை. 'தனக்கு அடுத்தாற்போல் தொழில் வளர்ச்சி மந்திரியாகி இருப்பவனுக்கு எதுவுமே தெரியாது — இலாகா அவனிடம் சிக்கிச் சொண்டு திண்டாடப் போகிறது' — என்று தோன்றியது. அடுத்த கணமே தான் தொழில் வளர்ச்சி மந்திரியான போது தனக்கு என்ன தெரிந்திருந்தது என்ற கேள்வியும் உள்ளத்தில் பிறந்தது. 'பஸ்களை எல்லாம் தேசிய மயமாக்கப் போகிறோம்' — என்று தானு கூட்டத்தில் பேசினால், ''ஐயோ, அப்படிச் செய்துவிடாதீர்கள்! இந்தாருங்கள்! இதைக் கட்சி நிதிக்கு வைத்துக் கொள்ளுங்கள்!'' —என்று பஸ் உரிமையாளர்கள் எல்லோருமாகத் தேடி வந்து சில லட்சங்களைக் காலடியில் காணிக்கையாகப் படைப்பார்கள். 'தியேட்டர்களை எல்லாம் தேசிய மயமாக்கப்போகிறோம்' என்று மிரட்டினால் தியேட்டர் உரிமையாளர்கள் ஓடிவந்து காணிக்கை செலுத்தப் போகிறார்கள். இந்த மிரட்டல் வேலையைப் பெரிய நிபுணத்துவத்தோடுதான் செய்யவேண்டுமா என்ன? தாலுகா ஆபீஸ் பியூன் கூடப் பிரமாதமாக இதைச் செய்து விட முடியும் என்று தோன்றியது. தகுதி, திறமை இவைகளை எல்லாம் பெரிதாக மதிக்க வேண்டிய அவசியமில்லை என்கிற மரபைத் தானும் தன் போன்றவர்களுமே ஒரு தலைமுறைக்கு ஆரம்பித்து வைத்துக் கற்றுக் கொடுத்தும் விட்டோம் என்பது இப்போது திருவுக்கே உறைத்தது. தங்களுக்கு வேண்டியவர்களைத் தகுதியும் திறமையும் உள்ளவர்களாகச் சொல்லிப் புகழவும் தங்களுக்கு வேண்டாதவர்களை அவர்கள் உண்மையிலேயே தகுதியும் திறமையும் உள்ளவர்களாக இருந்தாலும் இல்லாதவர்களாகச் சொல்லி இகழ்வதும் நடைமுறைப்படுத்தப் பெற்று வெகு நாட்களாக அமுலில் இருப்பது அவனுக்கே அப்போது தான் ஞாபகம் வந்தது. ஆகவே தனக்குப் பின் தொழில் மந்திரியாகி இருப்பவனிடம் தான் குறை காண்பது சரியில்லை என அவனே இப்போது தன்மனத்தைத் தேற்றிக் கொள்ளவேண்டியிருந்தது.

அறை முகப்பில் சர்மா தென்பட்டார். மகனைப் பற்றிய தகவல் தெரியும் என்பதால் அவரைக் கண்டதுமே அவன் மனத்தில் ஆவலும் பரபரப்பும் மூண்டன. சர்மா தனியாக வந்திருப்பதால் மகனை அழைத்து வர முடியவில்லை என்பதையும் அவனே ஊகித்துக் கொள்ள முடிந்தது. மகன் தன்னைப் பற்றி அவரிடம் என்னசொன்னான் என்பதையாவது தெரிந்து கொள்ளலாமே என்று உள்மனம் அப்போது படபடத்துத் தவிப்பதைத் தவிர்க்க முடியவில்லை.

(தொடரும்)

---

நானு பால்சிகார் சிறந்த குணசித்திர நடிகர்.

ஒருசமயம் சம்பல் பள்ளத்தாக்கில், களில்தத் ஒரு கொள்ளைக்காரன் கதையைப் படம் பிடிக்கச் சென்றிருந்தார். அப்போது மேலிருந்த மலைப்பகுதியில் ஆச்சார்ய விநோபா பாவே, வந்து தங்கியிருந்தார். நடிகர் ப்ராண், ஒரு வேடிக்கை செய்ய நினைத்தார். நான் இந்தக் கொள்ளைக்கார வேடத்திலேயே துப்பாக்கி ஏந்தியபடி சென்று ஆசார்யாரைத் தரிசித்து வரப்போகிறேன் என்று கூறிக் கிளம்பினார். 'மகான்களிடம் வேடிக்கை வேண்டாம்' என்று நானு பால்சிகார் அறிவுறுத்தியும் அவர் கேட்கவில்லை.' மறுநாள் காலை ஆசார்ய விநோபா பாவே தங்கியிருந்த குடிலையடைந்த ப்ராண், அவரது பாதத்தில் தலை சாய்த்து வணங்கி, 'தங்களிடம் சரணடைய வந்துள்ளேன்' என்று கூறினார். விநோபா ப்ராணின் தலையைத் தடவி கடவுள் உனக்கு நல்ல புத்தியைக் கொடுத்திருக்கிறான் உடனே இச்செய்தியைப் போலீசாருக்குத் தெரிவிப்போம்'' என்றார். ப்ராண், சிரித்தபடியே, 'ஆசார்யரே போலீசைக் கூப்பிட வேண்டாம். நான் கொள்ளைக்காரனல்ல; உங்களைத் தரிசிக்க மாறுவேடத்தில் வந்துள்ள நடிகன் ப்ராண்'' என்று கூறினார். விநோபாஜி ஏளனப் புன்னகையுடன், ''மகனே உன் சாமர்த்தியம் இவ்வளவு தானா? என்னைக் கண்டுபிடிக்கமுடியவில்லையா? நான் ஆசார்ய விநோபா பாவே அல்ல, நானு பால்சிகார்'' என்று கூறினார்

நன்றி: ப்ரஜாவாணி, எழுதியவர்: தஞ்சைமணியன்.



## 8

ஹோஸ்டலின் வரவேற்பறை மூலையிலிருந்த பப்ளிக் டெலிபோன் பூத்திலிருந்து ஐம்பது பைஸா முழு நாணயத்தை உள்ளே தள்ளி விட்டுக் கேட்டாள் இருத்திகா.

''கான் ஐ டாக் டு மிஸ்டர் விஷ்ணு பிரஸாத் ப்ளீஸ்...''

''மே ஐ நோ ஹூ ஈஸ் காலிங்...'' —எதிர்ப் பக்கத்துப் பெண் குரலில் ஒரு அலட்சிய பாவம் தெரிந்தது. அதைப் பொருட்படுத்தாமல் நிதானமாகவே பதில் சொன்னாள் இருத்திகா.

''என் பெயர் இருத்திகா. புவனேஸ்வரியின் பெண் என்று சொன்னால் புரியும்.''

''எந்த புவனேஸ்வரி...?'' – மீண்டும் அதே அலட்சியம் தொனிக்கிற கேள்வி.

''புவனேஸ்வரி ஃபேப்ரிக் மெட்டீரியல்ஸ்—'' இருத்திகா முடிக்கவில்லை. அதற்குள் எதிர்க் குரல் சடாரென்று மாறிற்று. அத்தனை நேர அலட்சியத்திற்கு மன்னிப்பு கேட்கிறமாதிரி மிகமிக பவ்வியமாகப் பதில் சொல்லிற்று.

''ஓ... ஐயாம் ஸாரி மேடம். ஒரு நிமிடம் இருக்கிறீர்களா?... எம். டி. பேசுகிறாரா என்று கேட்டுச் சொல்கிறேன், ப்ளீஸ்...''

''ஓ. எஸ்...'' என்ற இருத்திகா யோசித்தாள். அம்மாவின் பெயர் மந்திரஜாலம் மாதிரி ஒரு மாற்றத்தை ஏற்படுத்துவதை உணர்ந்தாள். புவனேஸ்வரி என்றபெயரைக் கேட்ட மாத்திரத்தில் அந்தப் பெண் அத்தனை அலட்சியத்தையும் விட்டுவிட்டு மிகப் பணிவாகப் பதில் சொன்னதிலிருந்து அப்பெண்ணிற்கு அம்மாவைத் தெரிந்திருக்க வேண்டும். அம்மாவைத் தெரிவதை விட 'தன் முதலாளி அம்மாவிடம் வைத்திருக்கிற மரியாதை, மதிப்பு, பக்தி, அன்பு... என்ன அது... இதில் எதுவாக இருக்கக் கூடும்? எதுவானாலும் அது இந்தப் பெண்ணிற்குத் தெரிந்திருக்கவேண்டும். முதலாளியிடம் இருக்கிற பயத்தினாலேயே இத்தனை பணிவாகப் பேச—'

''ஸ்பீக் ஆன் ப்ளீஸ்... எம். டி. ஈஸ் ஆன் தி லைன்...''

''குட்மார்னிங். ஐயாம்—''

''இருத்திகாதானே... எப்படி இருக்கிறாய்? ஹாஸ்டல் எல்லாம் வசதியாக இருக்கிறதா...?'' — சரளமாய் அவர் தமிழில் ஆரம்பித்ததும் தன் ஆச்சரியத்தை உள்ளடக்கிக் கொண்டே இருத்திகாவும் தமிழில் சொன்னாள்:

''ஓ... ரொம்ப வசதியாக இருக்கு சார்...''

''டெல்லி வந்து இத்தனை நாள் தேவைப் பட்டதா உனக்கு என்னிடம் பேச... ம்... உங்கம்மா சொன்னதிலிருந்து தினமும் நீ நேரில் வருவாய். இல்லாவிட்டால் டெலிபோனிலாவது கூப்பிடுவாய் என்று காத்துக் கொண்டிருந்தால் நீ என்னடாவென்றால், நிதானமாக ஒரு மாதம் கழித்துக் கூப்பிடுகிறாய்...''

''ஐயாம் ஸாரி சார்... காலேஜில் சேர்ந்த புதிது. கொஞ்சம் வேலை இருந்தது. நேரமும் கிடைக்கவில்லை.''

''போகட்டும். எப்போது வருகிறாய்?...''

''இன்று சாயந்திரம் வரலாமா என்று கேட்கத்தான் போன் பண்ணினேன்...''

''ஓ. எஸ். காத்துக் கொண்டிருக்கிறேன். எத்தனை மணிக்கு வருகிறாய்?''

''ஐந்தரை, ஆறு மணிக்கு...''

''வித் ப்ளெஷர்... வண்டி அனுப்பட்டுமா...?''

''வேண்டாம். நானே வருகிறேன்...''

''எப்படி வருவாய்....''

''மை ஃப்ரண்ட் ஹேஸ் எ வெஹிகிள். அதில் வருகிறேன்...''

''ஓ. கே. தென். அட்ரஸ் தெரியுமா..?''

''தெரியும் சார். அம்மா விஸிட்டிங் கார்ட் தந்திருக்கிறார்...''

''சரியாக ஐந்தரை மணியிலிருந்துகாத்துக் கொண்டிருப்பேன், ஓ. கே...?''

''ஓ. கே. சார்...''

உடனடியாக அர்ஜூனைக் கூப்பிட்டு அன்று மாலை விஷ்ணு பிரஸாத்தைச் சந்திக்க வேண்டுமென்பதைத் தெரியப்படுத்தினாள். அர்ஜுன் ஐந்தரைக்கு ஹாஸ்டலுக்கு வருவதாகச் சொன்னதும் டெலிபோன் தொடர்பைத் துண்டித்துக் கல்லூரிக்குக் கிளம்பினாள்.

அன்று பகல் முழுவதும் எந்தப் பாடத்திலும் மனம் போகவில்லை.

காரணமற்றதாக ஒரு பயத்தில் அழுந்திக் கொண்டு நின்றது. ஏதோ கெடுதல் ஏற்படப் போவதற்கான அறிகுறி தோன்றுவதாகப் பட அவள் வகுப்பை விட்டு எழுந்து ஹாஸ்டலுக்குப் போனாள். உடை மாற்றிக் கொண்டு படுத்தவள் எல்லா நினைவுகளையும் அகற்றி நிம்மதியாகத் தூங்க ஆரம்பித்தாள்.

எத்தனைநேரம் தூங்கினாளோ, ''இருத்திகா உனக்கு போன்...'' என்ற குரல் கேட்டுச் சடாரென்று எழுந்து உட்கார்ந்தாள். கல்லூரி முடிந்து அறையின் மற்ற

செனேகிதிகள் வந்து விட்டிருந்தார்கள். மணி நாலுக்கு மேல் ஆகியிருக்க வேண்டும் என்ற உணர்வில் பரபரவென்று கீழே ஓடி ரிஸீவரை எடுத்தாள்—

அர்ஜுன்...

''என்ன கீர்த்தி இந்த நேரத்தில் தூங்குவதாகச் சொல்கிறீர்கள். உடம்பு ஏதாவது சரியில்லையாம்மா...?''

அந்த அன்பு மனசைத் தொட அத்தனை நேரக் கலக்கம், பயம் எல்லாம் அகன்று போனவளாகச் சொன்னாள்:

''ஓ... அதெல்லாம் ஒன்றுமில்லை. லேசாய்த் தலையை வலிக்கிற மாதிரி இருக்கவே ரூமிற்கு வந்து படுத்தேன். என்னையும் அறியாமல் நன்றாகத் தூங்கி விட்டிருக்கிறேன். ஐயாம் சாரி ரொம்ப நேரமாக டெலிபோனில் காத்துக் கொண்டிருக்கிறீர்களா...?''

''நோ, நோ. இப்போதுதான் பண்ணினேன்.''

''ஐந்தரைக்கு விஷ்ணுப் பிரஸாத்தைப் பார்க்கப் போக வேண்டும். ஞாபகமிருக்கிறது இல்லையா...?''

''ஞாபகமிருப்பதால் தான் டெலிபோன் பண்ணினேன். யூ நெவல் டு எக்ஸ்க்யூஸ் மீ கீர்த்தி. இன்று மாலை ஆறு மணிக்கு மிக முக்கியமான மீட்டிங் ஒன்று இருக்கிறது. நான் அவசியம் இருந்தாக வேண்டும்...''

''என்ன அர்ஜுன்...?''

''தெரியவில்லை. மீட்டிங்கில் தான் தெரியும். எப்படியும் ராத்திரி உன்னைப் பார்த்துச் சொல்கிறேன். இப்போது நீ மட்டும் போய்



விஷ்ணுப் பிரஸாத்தைப் பார்த்துவிட்டு வந்து விடேன் இருத்திகா...?''

''இல்லை. நான் போகவில்லை. டெலிபோன் பண்ணி இன்னொரு நாள் வருவதாகச் சொல்லி விடுகிறேன்...''

''நோ, நோ. அது மரியாதையாக இருக்காது கீர்த்தி. உன் அம்மா வேறு இத்தனை தரம் எழுதிக் கேட்டுக் கொண்டிருக்கிற போது நீ போய்த்தான் ஆக வேண்டும். தைரியமாகப் போ கீர்த்தி. ஒன்றும் ஆகாது.''

''எனக்கென்னவோ உங்களுடன் போவது தான் நல்லது என்று தோன்றுகிறது.''

''நீ அனாவசியமாக மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறாய். என் கீர்த்தி இப்படி இருப்பதை நான் விரும்பவில்லை. தைரியமானவளாக, எந்த இடத்திலும், சலனப்படாமல் அவள் அவளாக இருப்பதைத்தான் விரும்புகிறேன்...''

''சரி போகிறேன்...''

''தட்ஸ் குட். ராம்சிங்கிற்கு போன் பண்ணிச் சரியாக ஐந்தரை மணிக்கு ஹாஸ்டலுக்கு வண்டியனுப்பச் சொல்கிறேன். டிரைவரிடம்விலாசத்தைச்சொல்லு. அவன் அழைத்துக் கொண்டுபோவான். அவரிடம் பேசிவிட்டு நேராக வீட்டுக்குவா. என்ன...?''

''அதற்குள் நீங்கள் வந்து விடுவீர்களா?''

''அப்படித்தான் நினைக்கிறேன்...!''

''சரி, விஷ்ணுப் பிரஸாத்தைப்பார்த்து விட்டு நேராக வீட்டிற்கு வருகிறேன். ராத்திரி சாப்பாட்டிற்குப் பின் நீங்கள் மறுபடியும் என்னை ஹாஸ்டலில் விட்டு விடுங்கள்...''

''ஓ. கே. டியர்...''

மீண்டும் அறைக்கு வந்து அவசர அவசரமாகக் குளித்து வேண்டுமென்றே ஸல்வார் கம்மீஸைத் தவிர்த்து ஒரு நல்ல வாயில் புடவையைக் கட்டிக் கொண்டாள். மடிப்பு மடிப்பாக வைத்து மேல் புடவையை அடக்கமாகப் பின் பண்ணிக் கொண்டாள். அதே ஒற்றைப் பின்னல். வழக்கத்திற்கு மாறாகச் சற்றே பெரிதான கறுப்புச்சாந்தில் பொட்டு. அதற்கு மேல் சிறிதாக விபூதி.

வார்டனிடம் சொல்லிக் கொண்டு வெளியில் வந்த போது அர்ஜுனின் வெள்ளை பியட் முயல் குட்டியாக நின்று கொண்டிருந்தது. அவளைப் பார்த்ததும் ஆசனத்திலிருந்து இறங்கிப் பின்பக்கக் கதவைப் பவ்வியமாகத் திறந்து விட்ட. சீருடை அணிந்த டிரைவர், ''குட் ஈவினிங் மாடம்'' என்று சொன்னான். ''குட் ஈவினிங் கிஷன். இதோ இந்த அட்ரஸுக்குப் போக வேண்டும்...''

அவள் நீட்டிய விலாஸ அட்டையை வாங்கிப் பார்த்த கிஷன் மல்ஹோத்ரா, ''அச்சா மேம்சாப்...'' என்று அதிராமல் நிதானமாக வண்டியை ஓட்டினான்.

கிரேட்டர் கைலாஷில் வீடுகள் பெரிது பெரிதாகத் தங்கள் எஜமானர்களின் பணப்பையின் வலிமையைச் சொல்லிக் கொண்டு நின்றன. அதிலும் விஷ்ணு பிரஸாத்தின் வீடு இன்னும் பெரிதாக இருந்தது. அசோக மரங்களும், சரக்கொன்றை நெருப்புக் கொன்றை மரங்களுமாகச்சேர்ந்து வீட்டின் பரிமாணத்திற்கும், விஸ்தீரணத்திற்கும் திரையிட்டிருந்தன. வாசலில் ப்ராஸோ பளபளப்பில் டி. விஷ்ணுபிரஸாத். பக்கத்துக் கூர்க்கா இவள் பெயரைத் தெரிந்து கொண்ட பின்னரே வாசல் கேட்டைத் திறந்தான். குரோட்டன்ஸ் செடிகளையும், அரைவட்டப் புல் தரையையும் கடந்து மிகக் கம்பீரமான போர்ட்டிகோவில் கார் நிற்க ஆக்ரோஷமாக இரண்டு அல்சேஷியன்கள் காதை விறைத்துக் கொண்டு உறும பயந்து போன இருத்திகா, காரை விட்டு இறங்காமல் உள்ளேயே ஒடுங்கிக் கொள்ள,

''ஹேய் டாமி, ஸீஸர் கப்ர ஹோ...'' என்ற அதட்டலுக்குப் பின்னர் பூனைக்கண்களும், வழுக்கைத் தலையுமாக ஒருவன் வந்து, காரின் கதவைத் திறந்தான்.

''ப்ளீஸ் கமின் மேடம். சாப் உங்களுக்காக மாடியில் காத்துக் கொண்டிருக்கிறார்.''

''நீங்கள் கொஞ்சம் அந்த நாய்களைப் பிடித்துக் கொள்கிறீர்களா...'' என்ற இருத்திகா, ''இங்கேயே இரு கிஷன். இதோ வந்து விடுகிறேன்...'' என்றாள்.

இரண்டு பேர்கள் நாய்களைப் பிடித்துக் கொள்ளக் காரின் கதவைத் திறந்தவன் மாடிப்படி வரை இருத்திகாவிற்குத் துணை வந்தான்.

''படியேறி வலதுகைப் பக்கம் முதல் அறை மாடம்...''

அவள் போன போது குளிர்ச்சாதனவசதியுடன் அந்த அறை அரையிருட்டில் கிடந்தது. நடுவில் ஷாண்டலியரின் வெளிச்சம் தொங்கிற்று. அதிலும் ஒரு கொத்து மட்டும் எரிய சோபாவில் புதைந்திருந்த விஷ்ணு பிரஸாத் எழுந்து வந்து வரவேற்றார்.

''வெல்கம் டு மை ஹோம், அண்ட் டு மை ரூம் இருத்திகா. ஐயாம் விஷ்ணு பிரஸாத்.'' —நாகரீகமாக வலதுகையை சற்றே உயர்த்திக் கைகுலுக்குவதற்காக நீட்ட இருத்திகா அந்தப் பயத்திலும், அதிர்ச்சியிலும் கூடக் கைகுலுக்காமல் மென்மையாய்க் கரம்

---

ஒருவர்: ''என் பெண்டாட்டி படி தாண்டாப் பத்தினி...!''

மற்றவர்: ''நீங்க தினமும் காலையிலே வாசல்ல கோலம் போடுவதைப் பார்த்தாலே தெரியுதே!''

—வி. சாரதி டேச்சு.





"எனது, பதினாறு
வயதுக் கால்பந்தாட்டக்
கில்லாடி அவன், ஒரு
நாள் உலகிலே மிகச்
சிறந்த 'ஃபார்வர்டு'
ஆவான்!"

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல. காட்பரீஸின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரீஸ்
## போர்ன்விடா
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.

1 கிலோ பேகிலும் கிடைக்கிறது. அதன் உள்ளே ஒரு <u>இலவசக்</u> குவளை.




OBM/3784 TAM

குவித்து, தமிழில் நமஸ்காரம் சொன்னாள். தான் எதிர்பார்த்ததற்கு மாறாக விஷ்ணு பிரஸாத் அட்டகாஸமான ஸஃபாரி சூட்டில் செக்கச் செவேலென்றிருந்தான். நல்ல உயர மானாலும் உடற்பருமனில் அது மறைந்து போய்த் தெரிய கண்களின் பாவனையைக் கண்டுபிடிக்க முடியாமல் கண்ணாடி அணிந்து கொண்டிருந்தான். கைகுலுக்க நீட்டிய வலதுகை விரல்களில் கூட வைரமோதி ரங்கள். நாற்பது, நாற்பத்திரண்டிற்கு மேல் மதிக்க முடியாத இளமைத்தோற்றம். அந்தத் தோற்றத்தில் பணத்தின் மிடுக்கு தெரிந்தது. அதிகார வர்க்கத்தின் ஆணவம் தெரிந்தது. படிப்பு தெரிந்தது. பரம்பரைச் செல்வம் தெரிந்தது. ஆனால் கண்ணியமோ, மரியாதையோ தெரிய மறுத்தது. பழைய கால சினிமாக்களிலும், கதைகளிலும் வந்த ஜமீன்தார், பண்ணையார்களை ஞாபகப் படுத்தும் இந்த உருவத்துடன் அம்மாவிற்கு எந்தவித நட்பு இருந்திருக்க முடியும் என்று யோசித்துக் கொண்டிருந்த போதே அவன் (இவனுக்கு அவர் என்கிற மரியாதை தேவை யில்லை என்பதைக் கிருத்திகா அறைக்குள் நுழைந்த சில விநாடிகளில் முடிவு செய்து கொண்டு விட்டாள்.) அவளை மிக நெருங்கி சோபாவில் உட்கார கிருத்திகா சற்று நகர்ந்து கொள்ள அவன் சிரித்தான்.

''என்ன அப்படிப் பயப்படுகிறாய் கிருத்திகா. ஃபீல் அட் ஹோம். புவனா வந்தால் எவ்வளவு ஃப்ரீயாக இருப்பாள் தெரியுமா...?''

'புவனா... இவன் அம்மாவை புவனா என்று கூப்பிடுகிறான்...' அவள் மெலிதாய்க் கீழ் உதட்டைக் கடித்துக் சொன்ன அவன் ஒரு விநாடி அவளைப் பார்த்துக் கொண் டிருந்து விட்டுப் பின் கேட்டான்:

''என்ன சாப்பிடுகிறாய்...''

உடம்பு முழுதும் அந்தப் பார்வையின் அருவருப்பு படரச் சொன்னாள் அவள்:

''ஒன்றும் வேண்டாம்...''

''நோ, நோ. இங்கு வந்து விட்டுச் சும்மா போகக் கூடாது. என்னவேண்டும், ஹாட் ஆர் கோல்ட்...''

''என்ன...''

''காபியா, டீயா அல்லது ஏதாவது ஜூஸ் வேண்டுமா என்று கேட்டேன்...''

''ஒரு டம்ளர் ஜஸ் வாட்டர்...''

அவன் காலடியிலிருந்த பொத்தானை அழுத்த அலிபாபாவின் குகை மாதிரி அறைக் கதவு தானே திறந்து கொண்டது. ஒரு விநாடிக்கெல்லாம் அந்தப் பூனைக் கண்ணன் அறை வாசலில் தோன்றினான்.

''குழந்தைக்கு ஒரு டம்ளர் சாத்துக்குடி ஜூஸ் அனுப்பு... யார் தெரிகிறதா...? நம் புவனேஸ்வரியின் பெண்...''

''ஓ...'' என்று சிரித்தான் அவன். ''அதனால் தான் இத்தனை அழகா இருக்கிறாள்...''

சடாரென்று கடுமையான விஷ்ணு பிரஸாத், ''நீ போய்ச் சொன்னதைச்செய். ஒரு டம்ளர் சாத்துக்குடி ஜூஸ்—''என்றான்.

''எஸ், ஸார்'' — அவன் அகல, கதவு தானாக மூடிக் கொண்டது. மீண்டும் விஷ்ணு பிரஸாத்தின் பார்வை அவளிடம் போகக் கிருத்திகா சங்கடப்பட்டாள். இந்த இடத்தை விட்டுச் சீக்கிரம் வெளியேறிவிட வேண்டும் என்று உள்ளுணர்வு எச்சரிக்கத் தலைநிமிர்ந்த போது—

அவன் — விஷ்ணு பிரஸாத் —இன்னமும் அவளை அப்படியே பார்த்துக் கொண்டிருந் தான்...

(தொடரும்)








# எலுமிச்சை மணம் கமழும் முக சவரம்!

இப்போது! முக சவரத்தைப் புத்துணர்ச்சிகரமாக்குகிறது கோத்ரெஜ்.

எலுமிச்சை தரும் தளதளவென்ற புத்துணர்ச்சி. மென்மை மற்றும் இதம். அத்துடன் செழுமையான க்ரீம் கொண்ட நுரை. தினந்தோறும் காலையில் முகத்திற்கு ஓர் இன்பகரமான அனுபவம். ஒவ்வொரு நாளும். ஒவ்வொரு முறை சவரம் செய்யும்போதும்.




புத்தம்புது எலுமிச்சையின் நறுமணம்.
அத்துடன் நீங்கள் விரும்பித் தேர்ந்தெடுக்க
ரிச்ஃபோம் மற்றும் மென்தால் மிண்ட்.




CLARION/GS/6/203



# புது வீட்டுக்குப் போறோம்!

முத்து. தங்க. ஐயப்பன்

நாங்க புது வீட்டுக்குப் போறோம். கொஞ்ச நாளா வீடு பூராவும் இமிலோகப் படுது. இன்னைக்குக் காலையிலதான் எனக்குச் சந்தேகம் வந்து தெளிவாச்சு.

''நம்ம வீட்டிலே இருக்கற சாமானையெல்லாம் ஏன் பாட்டி வெளியே கொண்டு போறாங்க?''ன்னு நான் கேட்டப்ப, பாட்டி தான் சொன்னாங்க, ''நாளன்னைக்குப் புது வீட்டுக்குப் போறோம்ல... அதுனாலத் தான்''னு.

கேட்டதுமே 'ஹை'ன்னு ஒரு குதி குதிச்சேன். ஒரே குஷியா இருந்துச்சு. ''ஆறாங் கிளாஸ் படிக்கிற பையன் ஏன்டா இப்பிடி குதிக்கறே?''ன்னு அம்மா கூட சண்டிச்சாங்க.

எங்க வீடு ரொம்பப் பெரிசு... வெளிலே காம்பவுண்டு வச்சு வீட்டைச் சுத்தித் தோட்டமா இருக்கும். தோட்டத்திலே பெரிய கிணறு. தொழுவத்திலே சிமைப்பசு ஆறு இருக்குது. கப்பல் மாதிரி ரெண்டு எருமை வேறே.

வீட்டிலே முன்பக்கம் பெரிய ஹால். யாராச்சும் நாலஞ்சு பேரோட அப்பாவோட பேச்சு சத்தம் அங்கே கேட்டுக்கிட்டே இருக்கும். அதைத் தாண்டி உள்ளே வந்தா பட்டாசாலை. பட்டாசாலையிலே பெரிய ஊஞ்சல். அந்த ஊஞ்சல்லே நான் ஆடுவேன். அம்மா ஆடும். பாட்டி கூட ஆடுவாங்க. அப்பா ஆடி நான் பார்த்ததே இல்லை. பட்டாசாலை நடுவிலே பெரிசா சரம்சரமாத் தொங்கற லைட் ஒண்ணு இருக்கு... ரொம்ப அழகா இருக்கும்... பொழுது போகாட்டி நான் ஊஞ்சல்லே படுத்துக்கிட்டு அந்த லைட்டையே பார்த்துக்கிட்டு இருப்பேன்...

எங்க வீட்டிலே நிறைய ரூம். எல்லாமே பெரிசு பெரிசா இருக்கும். எல்லா ரூம்லயும் நான் போய் வெளையாடுவேன். பூஜை ரூமுக்குள்ளே மட்டும் போய் விளையாட முடியாது. நிறைய சாமி படம் வச்சு அந்த ரூம் அழகா இருக்கும். அதுமட்டுமில்லே, தினசரி காலங்கார்த்தாலே அப்பா பயபக்தியோட அந்த ரூம்லே கும்பிடறதுனாலே, அப்பா இல்லாட்டியும் அந்த ரூமைப் பாக்கறப்ப எனக்குக் கொஞ்சம் பயமாவே இருக்கும்.

ஹால், பட்டாசாலை, பூஜைரூம் தவிர எங்க வீட்டிலே எந்த ரூமுக்குள்ளே நுழைஞ்சாலும் நசநசன்னு இருக்கும். மாடியிலே ஏலக்காயைப் பரப்பிவிட்டு ரூமுக்குள்ளே காயப் போட்டிருப்பாங்க. பக்கத்து வாசல் வழியா நிறையப் பொண்ணுங்க மாடி ரூமுக்கு வந்து வரிசையா உக்கார்ந்து முறத்திலே ஏலக்காயைப் போட்டுத் தூத்திச் சுத்தம் பண்ணுவாங்க... ஏலக்காய் இல்லைன்னு காப்பித் தனிர்.

இன்னொரு ரூம்லே நெல்லு வேக வைச்சு காயப் போட்டிருப்பாங்க... வேலைக்காரப் பொண்ணுங்களோட சேர்த்துக்கிட்டு அம்மாவும், பாட்டியும் நெல்லு கிண்டி விடறது பாக்கறதுக்கு ஜோரா இருக்கும். குனிஞ்சுக்கிட்டு பத்து விரலையும் நெல்லுக்குள்ளே விட்டு இப்படியும் அப்படியுமா ஆடிக்கிட்டே நகர்ந்து போவாங்க. கடைசியிலே பார்த்தா நெல்லு பூராவும் அரைவட்டமா வரிவரியா சின்ன அலை மாதிரி அழகா இருக்கும்...

அப்புறம், அப்பப்ப கம்பு, சோளம், பருத்தின்னு மூட்டை மூட்டையா வரும்... ஒரு தடவை பருத்தி மூட்டையிலே நான் ஏறிக் குதிச்சு விளையாடியப்ப, ''பருத்திக்குக் கொட்டை மாதிரி ஒருத்திக்கு ஒருவனாப் பிறந்திருக்கே... சுதானமா இருடா''ன்னு பாட்டி சண்டிச்சது இப்பவும் ஞாபகம் இருக்கு.

புது வீடு இந்த வீட்டை விடப் பெரிசா இருக்குமோ...? எவ்வளவு பெரிசா இருக்கும்?

வீடு மாறிப் புது வீட்டுக்குப் போறோம்கற குஷியிலே ரூம்ரூமா சுத்தினேன். ஆனா பட்டாசாலையைக் கடந்து வாசல் பக்கமா போனப்ப, மூலையிலே பெரிய்ய பீரோ வச்சிருந்த இடம் வெறிச்சுன்னு ஊமையா இருக்கறதைப் பார்த்ததும் அடிவயித்துலே ஒருமாதிரி சங்கடம்... மனசுக்குள்ளே ஏக்கமா ஒரு வலி குத்திச்சு...

அந்தப் பீரோ அப்பாவோட பீரோ. அப்பான்னு வீட்டில எல்லோருக்கும் பயம். உசரமா, சிவப்பா, பெரிய முழியும், கருகருன்னு மீசையுமா அப்பாவைப் பாக்கறப்ப பயம்மா இருக்கும். அவர் சாதாரணமாப் பேசறதே அதட்டற மாதிரி இருக்கும்; சந்தோஷமா அவர் கடகடன்னு சிரிச்சாக் கூட, கூடச் சேர்ந்து சிரிக்கறதுக்கு பயம்மா இருக்கும்.

எப்பவும் சண்டமாருதமாப் பேசற பாட்டிகூட, அப்பா வீட்டுக்குள்ளே வந்துட்டார்னு எங்கயோ பதுங்கிக் காணுமே போன மாதிரி இருக்கும். அப்பாவும், பாட்டியும் நேருக்கு நேராப் பேசி நான் பார்த்ததே இல்லே. அம்மா இருந்தா அம்மா மூலமா அப்பா கேட்பார். பாட்டி சொல்றதை அம்மா சொல்லும். அம்மா இல்லாட்டி நான். ஒருத்தரும் இல்லேன்னு, சுவரை வச்சுப் பேசிக்குவாங்களோ என்னவோ?

ஒருதடவை ஊஞ்சல்லே பாட்டி மடியிலே படுத்துக்கிட்டே, ''இந்தப் பெரிய வீட் எப்ப வாங்கினது பாட்டி... எங்கே வாங்கினுங்க?''ன்னு கேட்டேன்.

பாட்டி பெருமூச்சு விட்டுக்கிட்டே, ''ஹூம்... இந்த் வீட் வந்த அன்னைக்குத் தாண்டா உங்கப்பன் என் கூடப் பேசறதை விட்டான்''னு சொன்னர்.

''ஏன் பாட்டி...?''

''ஏனு...? வண்டமேட்டுலே நம்ம எஸ்டேட்டுலே வேலே பாக்கற ஒரு கூலிக்காரப் பொண்ணு மேல உங்க அப்பன் சொக்கிப் போயி, கட்டிக்கிட்டா அவளைத்தான் கட்டிக்குவேன்னு ஒத்தக் கால்லே நின்னன். உங்க தாத்தா அப்ப உசுரோட இருந்தார். விஷயத்தை வெளியிலே விடாமே நானும், உங்க தாத்தாவும் எவ்வளவோ புத்தி சொன்னேம். உங்கப்பன் கட்டுப்படலே. சொந்தத்திலே காத்துட்டு இருக்கறமுறைப் பெண்ணைக் கட்டிக்க மறுத்தான்னு, நான் கட்டுக்கிட்டுச் செத்துப் போவேன்னு உங்க தாத்தா என்கிட்டே சொல்லிட்டார்... நான் என்ன செய்றது... உங்கப்பன் சினேகிதங்க கூடச் சேர்ந்து சுத்துப்பயணமா வடநாட்டுக்குப் போயிருந்தப்ப நான் வண்டமேட்டுக்குப் போயி, அந்தக் கூலிக்காரப் பொண்ணுக்கு ஒரு பையனைப் புடிச்சு என் செலவிலே கல்யாணம் பண்ணி வச்சுட்டு வந்தேன்... அன்னைக்கிருந்து, இருபத்தேழு வருசமாச்சு... இன்னைக்கு வரைக்கும் உங்கப்பன் என் கூட மூஞ்சி கொடுத்துப் பேசறதில்லே.''

''அது சரி... பாட்டி... வீட்டு எங்கே வாங்கினது?''



''அதுதாண்டா... வடதேசம் போனான்ல. அப்ப பம்பாயிலேருந்து இதை வாங்கிட்டு வந்தான்... அப்ப ஊரே வந்து இதை வேடிக்கை பாத்துக்கிட்டுப் போகும்...''

இப்பிடித்தான், இந்த வீட்டிலே எதைப் பத்திப் பாட்டிக்கிட்டே கேட்டாலும் கதைகதையாச் சொல்ல ஆரம்பிச்சுடும்.

''பட்டாசாலையிலே இருக்கற போட்டோவுலே தாத்தா ஏன் குதிரை மேலே உக்காந்திருக்கார்''னு கேட்பேன். பாட்டி சொல்வாங்க. முந்தியெல்லாம் தாத்தா மலைக்குப் போறப்ப வீடே திமிலோகப்படுமாம். பத்து நாளைக்கு மளிகை சாமான் அது, இதுன்னு சேகரிச்சுப் பொட்டலம் போடுவாங்களாம். வீட்டிலே பொண்ணுங்களுக்கு தூக்கமே இருக்காதாம். உப்புச் சண்டம் போட்டு வீட்டுலே குறுக்கும் நெடுக்கும் சரம் சரமாத் தொங்குமாம். ஜாமத்திலே ரெண்டு மணிக்கு வீட்டு முன்னாடி குதிரை வந்து நிக்குமாம். தாத்தா குதிரை மேலே ஏறினதும், கணக்கப்பிள்ளை லகானைப் பிடிச்சுக்குவாராம். அப்படியே நடந்துக்கிட்டே மலைமேலே ஒத்தையடிப் பாதை வழியா ஏலத் தோட்டத்துக்குப் போவாங்களாம்... அந்தக் குதிரை லகான், சேணமெல்லாம் இன்னும் வீட்டிலே இருக்குது... பொழுது போகாதப்ப நான் அதுமேலே உக்காந்து ஆடுவேன்...

இப்ப மலைக்கெல்லாம் பஸ்ஸூம், டாக்சியும் போறதுனாலே அப்பா குதிரையிலே போறதில்லையாம். அப்பா காலையிலே மலைக்குப் போனா சாயந்திரம் கூட வீட்டுக்குத் திரும்பிடுவார்.

பாட்டிக்குக் காது பெரிசா இருக்கும். காது வளத்து தண்டட்டி போட்டிருப்பார். தண்டட்டி சிகப்பு சிகப்பா கல் பதிச்சுப் பெரிசா இருக்கும். பாட்டி பேசப் பேச ரெண்டு காதிலயும் தண்டட்டி ஆடிக்கிட்டு அழகா இருக்கும். அந்தத் தண்டட்டியையும், காதையும் வருடிக்கிட்டே நான் பாட்டி கூடப் பேசுவேன். அப்பப்ப நான் கேட்டதுக்கும், கேக்காததுக்குமா பாட்டி சொன்னதிலே தான் நான் பல விஷயங்களைத் தெரிஞ்சு வச்சிருந்தேன்.

---

நல்ல தேன் எதுவென கண்டுபிடிக்கச் சிறிதளவு தேனை அதே அளவு தண்ணீருடன் ஒரு கண்ணாடி டம்ளரில் ஊற்றினால் தேன் கரையாமல் இருக்கும். கலப்படத்தேன் தண்ணீருடன் மிக விரைவில் கலந்துவிடும்.

—பொ. க. சேஷாத்திரி



கல்யாணமே வேணாம்னு இருந்த அப்பா, தாத்தா சாகறப்ப உசிர் போகாமே ஆறு நாளா இழுத்துக்கிட்டு இருந்தப்ப, அவர் படறவேதனை தாங்காமே முறைப்பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிச்சாராம்... கல்யாணத்துக்கு அப்புறமும் அம்மாவை ஏறிட்டுப் பார்க்காமே இருந்தாராம்... அதுக்கப்புறம் என்ன ஆச்சோ, ஏது ஆச்சோ அப்பாவும், அம்மாவும் ரொம்பவும் அன்னியோன்னியமா ஆகி நான் பொறந்தேனாம்...

எனக்கு அம்மான்னா ரொம்பவும் பிடிக்கும். சிகப்பா, அழகா, பளிச்னு இருப்பாங்க. எப்பவுமே கழுவித் துடைச்ச மாதிரி முகம் சுத்தமா இருக்கும். நெத்தியிலே மீனாட்சி குங்குமம் எப்பவும் புதுசா இருக்கும். சிரிச்ச முகமா, மெதுவா, கலகலப்பா பேசற அம்மாவை வேலைக்காரங்களிலே இருந்து விருந்தாளிங்க வரை எல்லோருக்கும் பிடிக்கும்.

''நம்ம வீட்டுக்கு விருந்தாளிங்க கூட்டங் கூட்டமா வர்றாங்கன்னா அது உங்கம்மாவோட குணத்துக்காகத்தாண்டா... முகடு மாதிரி இருக்கற உங்கப்பனுக்காக யாரு வருவா?''ன்னு பாட்டி அடிக்கடி சொல்லும்.

அப்பா ஒண்ணும் பாட்டி சொல்றமாதிரி முகடு இல்லே. பட்டாசாலையிலே போட்டோவுலே — போட்டோன்னா என்னமாதிரி ஒண்ணரை மடங்கு உசரம் — தாத்தா எப்படி உசரமா, கம்பீரமா இருப்பாரோ அதே மாதிரிதான் அப்பாவும். எப்பவும் அதிகாரம் பண்ணிக்கிட்டே இருப்பார். ''தண்ணி கொண்டுவா''ன்னு சொல்றது கூட சாட்டையிலே அடிக்கிற மாதிரி கணீர்னு இருக்கும். ஆனா சிடுசிடுப்பு இருக்காது. முகடுன்னா சிடுசிடுத்துக்கிட்டே இருக்கணும்லே, போன வருஷம் எனக்குச் சொல்லிக் கொடுத்த அஞ்சாங் கிளாஸ் வாத்தியார் மாதிரி. அப்பா சிடுசிடுக்கமாட்டார்... சொல்லுவார்... எல்லாரும் மறு பேச்சுப் பேசாமே உடனே கேப்பாங்க.

இப்படி அப்பா அதட்டலும் உருட்டலுமா இருப்பாரே தவிர அவருக்கு ரொம்பவும் இளகின மனசு. வாசல்லே வந்து நிக்கிறவங்களுக்கெல்லாம் அவர் எத்தனையோ தடவை வாரிக் கொடுத்ததை நானே பார்த்திருக்கேன். ஏழைங்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கறதிலேயே அப்பா நிறையப் பணத்தைத் தொலைக்கிறார்னு பாட்டி கூட அப்பப்ப முணுமுணுக்கும். எங்க ஸ்கூல்ல கூட அப்பாவோட போட்டோ இருக்கு.

அப்பா என்கிட்டே அதிகம் பேசினதே இல்லே... எப்பவாச்சும் என்னைப் பத்தி அம்மாகிட்டே கேப்பார். ''தாகூர் சாப்பிட்டானா... தாகூர் ஏன் இப்பிடி அழுக்கா இருக்கான்?'' இப்பிடி. அப்பாவுக்கு அம்மா சாப்பாடு போடறப்ப, நான் பக்கத்திலே இருந்தேன்னா அம்மா என்னையப் பத்தி ஏதாவது சொல்லும். அப்ப, அப்பா என்னை பாத்து, ''ஏண்டா, அப்படியா?''ம்பார். நான் சிரிச்சுக்கிட்டே அம்மாவுக்குப் பின்னாடி ஒளிஞ்சுக்குவேன். அம்மா என் கூட இருந்தாத்தான் நான் அப்பாவைப் பார்த்துச் சிரிப்பேன். தனியா இருந்தாலோ ஒரே


BRIEFS
new YOU PANTIES
KIDSWEAR
VESTS
CASUALS
உடலோடு இணைந்து உள்ளம் கவர்ந்து
எழில் நிறைந்து... ஈடிணையற்றது...
பாண்டெக்ஸ்®
தயாரிப்பு

ஓட்டம்தான். எப்பவோ ஒரு தடவை மைபாட்டில் தடுக்கி அது சிலீர்ன்னு உடைஞ்சு விழுந்தப்ப, அப்பா என்னை ஒரு முறை முறைச்சார். அன்னைக்கிருந்து தனியா அவர்கிட்டே போறதில்லை.

ஆறு மாசத்துக்கு முன்னே எங்க வீட்டில ஏகக்கூட்டமா இருந்துச்சு. எப்பப் பார்த்தாலும் வீட்டு முன்னாலே காரும், ஜீப்புமா வந்து நிக்க ஆரம்பிச்சுது. அப்பா வெளியே போயிட்டு வர்றப்ப நிறைய மாலைகளோட வீட்டுக்கு வந்துக்கிட்டிருந்தார். ஆளுங்க கூட்டம் கூட்டமா வர்றதும், போறதுமா ஜேஜேன்னு இருந்துச்சு... வீட்டிலே தனியா இருந்தப்ப அம்மா அழுதுக்கிட்டே அப்பாகிட்டே ஏதோ சொல்லும். அப்பா சமாதானப்படுத்துவார்.

அப்பா கும்பிட்டுக்கிட்டு இருக்கறமாதிரி ஊர் பூராவும் படம் போட்டு ஒட்டியிருந்தாங்க. வீட்டு முன்னாடி போற ஊர்வலத்திலே அடிக்கடி அப்பா பேரைச்சொல்லி 'ஜே'ன்னு கத்துவாங்க.

ஸ்கூல்லே ஹெட்மாஸ்டர் கூட அப்ப என்னைப் பார்த்துக் கேட்டார். ''உங்கப்பா எம். பிக்கு நிற்கிறார். நீ எம். எல். ஏக்கு நிக்கலையா?''ன்னு சொல்லிச் சிரிச்சார். எனக்கு ஒண்ணும் புரியலை. பேப்பர் படிச்சாக் கூட எனக்கு இந்த மாதிரி விஷயமெல்லாம் புரிய மாட்டேங்குது... ஒரு தடவை அம்மாகிட்டே கேட்டேன்... பேப்பர்லே அடிக்கடி சர்க்கார் கவலைன்னு போடறாங்களே, அந்த சர்க்கார்ங்கறவரு யாரும்மா, ஏன் அவுரு அடிக்கடி கவலைப்படறார்ன்னு கேட்டேன். அம்மா அப்பாகிட்டே இதைச் சொல்ல, அப்பா கடகடன்னு சிரிச்சார்.

திடீர்னு எங்க வீட்டிலே எல்லோரும் கவலையா ஆயிட்டாங்க. அப்பா அறுநூறு ஓட்டுலே தோத்துட்டாராம். தேர்தலுக்காக எவ்வளவோ செலவழிச்சவரு, கடைசிநேரத்திலே கள்ள ஓட்டுக்குப் பணம் செலவழிக்க மாட்டேன்னு சொல்லி, கட்சி ஆளுங்களைத் திட்டிட்டாராம். அதுனாலதான் தோத்துட்டாராம்... பாட்டி சொன்னாங்க...

அதுக்கப்புறம் வீடே ஒரு மாதிரி உம்னு இருக்கு... அப்பப்ப ஒவ்வொரு சாமானா வீட்டை விட்டுப் போய்க்கிட்டே இருக்கு... அப்பா மட்டும் எப்பவும் போலக் கணீர், கணீர்னு பேசறார்.

புது வீட்டுக்குப் போற சமாச்சாரத்தை என் கிளாஸ் பையங்களுக்கெல்லாம் சொன்னேன். சாக்லேட் கேட்டாங்க. வாங்கிக் கொடுத்ததும் 'ஓ'ன்னு சந்தோஷப்பட்டாங்க. கிளாஸ் டீச்சர் கிட்டேயும் சொன்னேன். அவங்க ஒண்ணும் பேசலை.

கொஞ்ச நேரத்துக்கு முந்தி அப்பா சாப்பிட்டுட்டுக் கையைத் துண்டாலே துடைச்சிக்கிட்டு இருந்தார். அம்மாகிட்டே போய், ''புது வீடு இதை விட பெரிசா இருக்குமாம்மா?''ன்னு கேட்டேன். அம்மா, அப்பாவைப் பார்த்தாங்க. அப்பா ஒரு நிமிஷம் என்னை உத்துப் பார்த்தார். எனக்குக் காலெல்லாம் நடுங்க ஆரம்பிச்சது. அப்பா என்கிட்டே வந்து என் தலையை மெதுவா வருடிக் கொடுத்தார். சுகமா இருந்துச்சு. நெத்தியிலே சலுஞ்சு இருந்த முடியையெல்லாம் ஒதுக்கி விட்டார். அப்பா என்னைத் தொட்டதுலே எனக்கு ஏகப்பட்ட சந்தோஷம். அம்மா அப்பாகிட்டே ஏதோ கேட்டதுக்கு அப்பா, ''இதெல்லாமா சொத்து... மனசுதான் அம்பிகா, சொத்து... செல்வம்கறது சிந்தையின் நிறைவுன்னு எங்கப்பா அடிக்கடி சொல்லுவார்... அது உண்மைதான்''னு சொன்னார். எனக்கு ஒண்ணும் புரியலை.

அப்பா போனத்துக்கப்புறம் அம்மாவைப் பார்த்தேன். அம்மா கண்லே தண்ணி தளும்பிச்சு. ஏன் அழுவுறாங்க...?

அப்பா என்னைத் தடவிக் குடுத்ததுனாலே எனக்குச் சுறுசுறுன்னு குஷியா இருந்துச்சு. குதியாட்டம் போட்டுக்கிட்டு ரூம்ரூமாச் சுத்தி வர்றேன். பாட்டி என்னைப்பார்த்து, ''டேய், கொஞ்சம் சும்மா இர்ரு''ன்னு சொல்றாங்க.

எப்பிடி சும்மா இருக்கறது? புது வீட்டுக்குப் போறோம்லே?

---

## சந்தீப்பட்டீலின் 2 வது இன்னிங்ஸ்!

கிரிக்கெட் வீரர் சந்தீப் பாட்டீல், முதல் மனைவி அர்ச்சனாவை விவாகரத்து செய்து விட்டது பழைய விஷயம். இப்போது இரண்டாவது இன்னிங்ஸ் ஆடவிருக்கிறார். புது பார்ட்னரின் பெயர் தீபிகா திவேகார். கடைசி வருட பி. காம். படிக்கிறார். வயது 19. தீபிகா, சந்தீப்பின் அடுத்த வீட்டுப் பெண். தன் வீட்டு பால்கனியிலிருந்து தீபிகாவைப் பலமுறை பார்த்திருக்கிறார் சந்தீப். அவருக்கு சந்தீப் மீது ஒரு 'இது'. பெற்றோர்கள்பார்த்து நிச்சயம் பண்ணி விட்டார்கள்.

முக்கியமான விஷயம் தீபிகாவுக்கு ஸ்போர்ட்ஸ் என்றால் (குறிப்பாகக் கிரிக்கெட்) பிடிக்காத சமாசாரமாம். 'எனக்கு இது ஒரு பிளஸ் பாயிண்ட். ஏனெனில் சில சமயம் நான் மோசமாய் ஆடினால், விமர்சிக்க முடியாதே!' என்கிறார் சந்தீப்!

—சொஸைட்டியிலிருந்து: மௌஷ்மி.



# சமைத்து 4 மணி நேரங்கழித்துக்கூட மணம் கமழும் சூடான உணவை பரிமாற இக்லூ ஹாட் பேக் இப்பொழுது உங்களுக்கு உதவுகிறது




**மறுபடியும் சூடவைக்கும் வேலையே இல்லை**

சாதமானாலும் சரி, குழம்பு, கறி வகைகளானாலும் சரி, சமையலை சீக்கிரமே முடித்து இக்லூ ஹாட்பேக்கில் வைத்து மூடிவிடுங்கள். 4 மணி நேரம் கழித்து பரிமாறினாலும் உணவு சமைத்த சூட்டோடு, ருசியாகவும், சத்து மிக்கதாகவும் இருக்கும்.

**நேரமும் எரிபொருளும் மிச்சம்...**

ஏனெனில் உணவை மீண்டும் சூடாக்கு வதை தவிர்க்கிறது. மேலும் உணவுச்சத்து இழப்பையும் இது தடுக்கிறது.

ஜெனரல் மர்ச்சன்ட்ஸ் கடைகளில் இக்லூ ஹாட்பேக் பல சைஸ்களில் கிடைக்கும். இன்றே ஒரு இக்லூ ஹாட்பேக் வாங்குங்கள். அதனால் பல விதத்திலும் லாபம். மேலும் அதிக ஓய்வு நேரம் கிடைக்கிறது.

**இக்லூ ஹாட்பேக்கின் திறமைக்கு ஒரு சான்று**

தொடர்ந்து இரண்டு மாதம் இந்த ஹாட் பேக்கை சோதித்து பார்த்து சென்னை கேடரிங் இன்ஸ்டிட்யூட் கீழ்க்கண்ட சான்றுரையை வழங்கியுள்ளது.

''இது உஷ்ணத்தை நன்கு பாதுகாக்கிறது. அதே சமயம் உணவில் ருசிக் குறைவு ஒன்றுமில்லை. 8 மணி நேரத்திற்கு பிறகு கூட உணவின் மணத்தில் ஒரு குறைவும் ஏற்பட வில்லை... இப்பெட்டிகள் திறன் மிக்கவை!"

**IGLOO hotpack**



பியர்ட்ஸெல் இன்சுலேஷன் லிமிடெட்டின்

தரமான தயாரிப்பு

OBM 4897 TM R

# சைலே...ன்ஸ்

—சம்பத்ஜி



✕ ஷைலஜா

## "எனக்குப் பிடித்தது..."

இனது முதல் பாடல் 'சோலைக்குயிலே' பாடும்போது ஷைலஜாவிற்குச் சத்தியமாகத் தமிழில் ஒரு வார்த்தை கூட பேசத் தெரியாதாம்.

இதுவரை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் நான்கிலுமாகச் சேர்த்து 1000 பாடல்கள் பாடி விட்டதாகச் சொன்னார்.

"ரிகார்டிங் தியேட்டருக்குப் போய், டியூனைக் கேட்டு, அடுத்த நிமிடம் பாடுவதற்குத் தயாராவதில் ஒரு திரில் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் வீட்டுக்கு வந்ததும் டியூன் மறந்து போய் விடுகிறதே..." என்றார். அவர் சூசகமாக எதைச் சொல்ல வருகிறார் என்பதைப் புரிந்து கொண்டு, 'ஓ. கே. ஓ. கே' என்று தலையாட்டினேன்.

இவருக்குப் பிடித்த இவரது பாடல்: 'ராசாவே உன்னை நான் எண்ணித்தான்'.

## "எனக்கு 'விதி'த்தது..."

பாலாஜியின் சுஜாதா சினி ஆர்ட்ஸ்' அலுவலகத்தில் அவரது ஆஸ்தான வசன கர்த்தாவிற்கென்று ஒரு தனி ஏ. சி. அறை உண்டு.

முன்பு ஏ. எல். நாராயணன் இருந்தஅதே அறையில் இப்போது ஆரூர்தாஸ் அமர்ந்திருந்தார்.

விதி படத்தின் வெற்றிக்குப் பிறகு தானிற்கு 14 புதிய படங்கள் கிடைத்திருக்கிறதாம்.

"பொதுவாகப் படத்தின் கிளைமாக்ஸ் உணர்ச்சிகரமாக இருந்தால்தான் வசன கர்த்தாவின் திறமை வெளிப்பட முடியும். பாசமலர், பார்த்தால் பசிதீரும் போன்ற படங்களில் எல்லாம் அப்படிப்பட்ட கிளைமாக்ஸ் இருந்ததால்தான் நான் பெயர் வாங்க முடிந்தது. 32 ஆண்டுகளுக்குப்பிறகு ஒரு கோர்ட் சீனை உச்சக்கட்டமாக வைத்து, வலுவான வசனங்களால், மக்களின் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பிய படம் விதிதான்" என்றார். அடுத்து இவர் வசனத்தில் வெளி வருகிற படம்; 'ஓசை.'

ஆரூர்தாஸ், "ஆபாசமான வசனங்களை எழுதும்படி எந்தத் தயாரிப்பாளராவது என்னைக் கட்டாயப்படுத்தினால் எழுதமாட்டேன். ஆனால் நானாக விரும்பி எழுதுவேன்" என்று சொன்னதைக் கேட்டதும் எனக்கு வயிற்று வலி தாங்க முடியவில்லை. பின்னே, விழுந்து விழுந்து சிரித்தால் வயிறு வலிக்காதோ..."

## "எனக்குப் பார்த்தது..."

ஸ்ரீபிரியாவிற்கு அவர் வீட்டில் மாப்பிள்ளை பார்த்து விட்டார்களாம். பக்கத்தில் இருந்த ஒரு சினிமாக்காரரிடம் இதைச் சொல்லி விட்டு, என்னிடம் திரும்பி, "இந்த விஷயத்தை உங்க பத்திரிகையிலே எழுதிடாதீங்க" என்றார், பிரியா. அதற்கு அர்த்தம், 'எழுத மறந்திடாதே' என்கிற மாதிரி பட்டது. எழுதி விட்டேன்.

அடுத்த முறை ஸ்ரீபிரியாவை நேரில் சந்திக்க நேர்ந்தால்...என்னவோ, விதிப்படி நடக்கட்டும்

✕ ஸ்ரீப்ரியா



# மாப்பிள்ளை பார்த்தாச்சு



✕ ஸ்ரீ

## "என்னைக் கைதூக்கி விட்டது..."

ஸ்ரீ என்கிற மகாலட்சுமியை... இல்லை மகாலட்சுமி என்கிற ஸ்ரீயை, ஒரு மஞ்சள் வெயில் மாலையிலே விஜயா கார்டனில் சந்திக்க நேர்ந்தது.

வெள்ளை நிறத்தில் நிஜாரும் பனியனும் போட்டுக் கொண்டு கண்ணுக்குக் குளிர்ச்சியாகத் தெரிந்தார்.

''என்னதான் ஹீரோயின் ரோல் என்றாலும் இன்னும் பெரிய ஹீரோக்கள் யாருடனும் நீங்கள் இணைந்து நடிக்கவில்லையே?'' என்றேன்.

''அதற்கும் ஒரு நேரம் வர வேண்டாமா? சீக்கிரம் வரும் என்றுதான் எதிர்பார்க்கிறேன்... ஏன், 'நன்றி'யில் கார்த்திக்குடன் நடித்திருந்தேன்; அவர் பெரிய ஹீரோதானே...'' என்றார். (கார்த்திக் சந்தோஷப்பட்டுக் கொள்வாராக)

கன்னடத்தில் இதுவரை 8 படங்கள் நடித்து விட்டாராம். அதில் 4 சூப்பர்ஹிட்டாம்.

''தேவி ஸ்ரீதேவி சரியாகப் போகவில்லை என்றாலும் என்னை ஒரு கதாநாயகியாக ரெககனைஸ் பண்ணியது அந்தப் படம்தான். கன்னடம் என்னைக் கைதூக்கி விடும் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.'' என்றார், ஸ்ரீ.

## "எங்களைக் கவிழ்த்தது..."

பிரசாத் ஸ்டுடியோ. ஃப்ளோர் வாசலில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு, தமது வழக்கமான ஆசாமிகளோடு பேசிக் கொண்டிருந்தார், சிவாஜி.

உள்ளே ஷாட் — கம்போஸிங்கில் தீவிரமாக இருந்தார்கள், பாரதி—வாசு இரட்டை டைரக்டர்கள். படம்: நீதியின் நிழல்.

பன்னீர் புஷ்பங்களுக்குப் பிறகு இந்தப் படத்தைத்தான் ரொம்பவும் நம்பி இருக்கிறார்களாம். 'இடையில் வந்த மதுமலரும், மெல்லப் பேசுங்களும் தோல்வி அடைந்ததற்கு நாங்கள் காரணமல்ல' என்பது இவர்கள் வாதம்.

''டைரக்ஷன் சைடில் சிறப்பாக இருந்தும் மதுமலர் கதையும், மெ. பேசுங்கள் படத்திற்குப் போதுமான விளம்பரம் இல்லாததும் தான் எங்களைக் கவிழ்த்து விட்டது'' என்றார் வாசு.

பாரதியின் அப்பா எம். ஆர். சந்தானம் முன்னொரு காலத்தில் சிவாஜியை வைத்து அன்னை இல்லம், பாசமலர் போன்ற படங்களைத் தயாரித்தவர். அந்த உறவில்தான் சிவாஜி இப்போது இவர்களுக்கு இயக்குநர் சான்ஸ் கொடுத்திருக்கிறாராம்.

✕ பாரதி வாசு



**சிவிமுடிச்சு சிங்காரிச்சு**

வேண்டுதல்படி கோயிலில் முடிகொடுத்து விட்டு வந்து மறுநாள் வழக்கம் போல் பாக்கெட்டிலிருந்து சீப்பை எடுத்து நன்ருக 'வாரி' விட்டேன். சுற்றியிருந்தவர்கள் சிரித்ததில் கொஞ்சம் வலி குறைந்தாற் போல் இருந்தது.

**இ. சையத் ஜவஹர். சேலம்-5**

**ஒரு தவறு வெளிச்சமானபோது**

அலுவலகத்திலிருந்து திரும்ப நேரம் ஆகி விட்டது. பவர் கட் வேறு. நேராகப் படுக்கை அறைக்குள் சென்று கட்டிலின் மேல் இருந்த மனைவியின் மாக்ஸியை லுங்கி என்று எண்ணி எடுத்துச் சுற்றிக் கொண்டேன். அந்தக் கணமே மின்சாரம் வர, மனைவியும் குழந்தைகளும் சிரியோ சிரி என்று சிரிக்க...

**கே. வி. கோபாலகிருஷ்ணன், சேலம்**

**காதலியின் அவஸ்தை**

நண்பன் கிளம்புவதற்கு முன் அவனிடம் ஆபீஸுக்கு லீவ் லெட்டர் கொடுத்தனுப்ப வேண்டும் என்று அவசர அவசரமாக எழுதினேன். மறுநாள் ஆபீஸே கோலாகலமாய் என்னை வரவேற்றது. மானேஜர் 'காதலியின் அவஸ்தை தீர்ந்ததா!' என்று கரிசனமாக விசாரித்து விட்டு என் லீவ் லெட்டரை நீட்டினர். 'காதுவலி' என்பதற்குப் பதில் 'காதலி' என்று எழுதியிருந்தேன்.

**கி. ராமச்சந்திரன், கோவை-5**

**ஈயடிச்சான் காப்பி**

கடன் வாங்க விண்ணப்பத் தாளைப் பூர்த்தி செய்து கொண்டிருந்தேன். மற்றொருவரது விண்ணப்பத்தைப் பார்த்து எழுதிக் கொண்டே வருகையில் 'மனைவியின் பெயர்' என்ற இடத்தில் அவர் எழுதி வதையே நானும் எழுத 'யோவ் அது என் மனைவி ஐயா' என்று அவர் அலறிய போது தான் தவறை உணர்ந்தேன்.

**கே. வி. பாஸ்கரன், மாங்காடு**







**புதிய பாடம்**

விலங்கியல் ஆசிரியர் கரும் பலகையில் 'Zoology' என்று எழுதிவிட்டு நாலாவது ஃபாரம் மாணவர் ஒருவரைப் படிக்கச் சொன்னர். அதை அவன் Two hundred ology என்று வாசித்தான். கட்டிடமே சிரிப்பொலியில் அதிர்ந்தது.

**ஏ. ஜி. குருசாமி, மதுரை-10**

**மறதியோ மறதி**

திடீர் விருந்தாளிகள் வரவே அவசரமாக இரண்டாம் முறை குக்கர் வைத்தேன். அரை மணி ஆகியும் ஆவி சத்தம் வரவில்லை. எட்டிப் பார்த்த போது தான் தெரிந்தது. அடுப்பை ஏற்ற மறந்து விட்டேன் என்று!

**சகுந்தலா பன்னீர்செல்வம், விழுப்புரம்**

**அந்த மழைநாளை மறக்க முடியாது**

அன்று காலை ஒரே மழை. தொழிற்சாலைக்குப் போகும் போது ரெயின் கோட்டை மாட்டிக் கொண்டு போனேன். அங்கு சென்று மழைக் கோட்டை அவிழ்த்த போது தான் தெரிந்தது சட்டை போட்டுக் கொள்ளவே மறந்து விட்டேன் என்று!

**எஸ். இனியபெருமான், பம்மல்**

# சிறு தவறு பெரும் சிரிப்பு

## டங் ஆஃப் தி ஸ்லிப்

வருகைப் பதிவேட்டைப் பிரித்துச் சிரியலாகப் பெயர்களைக் கூப்பிட்டேன். முருகமணியை 'முருங்கமணி' என்று கனிரென்று அழைக்க, 'நேற்று முந்தாளே முடிச்சு' பாத்தீங்களா சார்' என்று பையன்கள் வார ஆரம்பித்து விட்டனர்.

ஆர். முத்துராம், திண்டுக்கல்-6

## ரவையூண்டு சர்க்கரை

கஷ்டப்பட்டுக் காப்பி கலந்து கொடுத்தால் ஒட்டு மொத்தமாய் எல்லோரும் இனிப்பே இல்லே என்றார்கள். சர்க்கரையைச் சர்வ ஜாக்கிரதையாய் அளந்து போட்டேனே என்று குழம்பிக் கொண்டே அடுக்களைக்குள் போய்ப் பார்த்தேன். காப்பி பாத்திரத்தின் அடியில் ஊறிக் கொண்டிருந்த ரவை என்னைப் பார்த்துக் கேலியாய்ச் சிரித்தது!

ஆர். ராதாச்சந்திரன், மேட்டூர் அணை

## கல்யாணத்தில் கலாட்டா

தங்கையின் கல்யாணம். கழுத்து வரை வேலை. என் மூன்று வயது வாண்டு இந்த நிமிடம் குளிக்க வேண்டும் என்று அடம் பிடித்தான். அவனைக் குளிப்பாட்டி விட்டுத் தலை துவட்டுவதற்குள் வேறு வேலை குறுக்கிட்டதால் அதை முடித்து விட்டு வந்து பவுடர் போட ஆரம்பித்தேன், என் இரண்டு வயது மகளுக்கு. அவள், 'நான் குளிக்கல்ல' என்று மழலையில் மொழிய குழந்தைகள் உட்பட எல்லோரும் சிரித்து விட்டோம்.

பி. எல். சிவகாமி, சென்னை-78

## ஞாபகம்

பாக்கெட் பிரிந்து விட்டது தைத்துக் கொடு என்று சட்டையை நீட்டினார் கணவர். தையல் கற்றுக் கொண்ட புதிது. ஆவலுடன் மூன்றே நிமிடத்தில் வேலையை முடித்துக் கொடுத்தேன். சட்டையை மாட்டிக் கொண்டு தடவித் தடவித் தேடினார் கணவர்.

''என்ன தேடுகிறீர்கள்?''

''பையைத்தான்.''

பிறகு தான் உதயமாயிற்று பாக்கெட்டின் நான்கு பக்கங்களையும் தைத்து விட்டிருந்தேன் என்று.

ஸரோஜா, திருச்சி-14

## புதிய நாட்டியம்

குடும்ப நண்பர் ஒருவர் வந்திருந்தார். நான் கைகூப்பி வணக்கம் சொல்லியபோது அவர் கைகுலுக்கக் கைநீட்டினார். உடனே நான் கை நீட்டினேன். அதற்குள் அவர் கரம் கூப்பி விட்டார். இப்படியே மாற்றி, மாற்றி நான்கைந்து தடவை செய்தோம். புதுமையான நாட்டிய அபிநயம் மாதிரி அமைந்து விட்டது.

திருமதி பஷீர் அஹமது, சென்னை-28

## திரும்பி வந்த தபால்

என் பெயருக்கு மணியார்டர் வந்திருப்பதைப் பார்த்துவிட்டு வீட்டில் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். முந்தைய தினம் மணியார்டர் ஃபாரத்தைப் பூர்த்தி செய்கையில் பெறுநர் விலாசத்தை மாற்றி எழுதி விட்டேன் என்பது ஃபாரத்தை வாங்கிப் பார்த்ததும் தெரிந்து விட்டது.

ஆ. நசீமா, திருச்சி-20

**வாசகர் பங்கு**

### கலாட்டா பெட்டி

ஓட்டல் கல்லாப் பெட்டியில் உட்கார்ந்திருந்தேன். ஏதோ ஞாபகத்தில் சிப்பந்தி கொடுத்த பில்லைக் கல்லாவில் போட்டுவிட்டு பத்து ரூபாய் நோட்டை பில் கம்பியில் 'சரக்'கென்று சொருகி விட்டேன். ஒரே கலாட்டாதான்.

**இ. மணி, மதுராந்தகம்**

### தோசை நடத்திய பூகோள பாடம்

மாமியார் அரைத்த தோசை வார்க்கச் சொன்னார். அப்போது எனக்குத் திருமணமான புதிது. ஒவ்வொரு தோசையும் ஒவ்வொரு உருவில் வந்தது. நடுங்கிக்கொண்டே பரிமாறினேன். என் கடைசி மைத்துனர் சமயோசிதமாய் ''நாம் உலக மாப் (Map) பார்க்க வேண்டிய அவசியமேயில்லை. மன்னி வார்த்த தோசையிலேயே ஆப்பிரிக்கா, ஐரோப்பா, ஆசியா என்று எல்லா கண்டங்களும் இருக்கின்றன'' என்றான். மற்றவர்களுடன் நானும் கவலையை மறந்து சிரித்தேன்.

**உமா பாலகிருஷ்ணன், நாஸிக்மாவட்டம்**

### ஒரு கணவன் மனைவியாகிறார்

அடுத்த வீட்டிலிருந்து மனைவிக்கு ஃபோன் செய்தேன். ''கொஞ்சம் லக்ஷ்மியைக் கூப்பிடுங்கள். நான் அவள் ஒய்ஃப் (Wife) பேசுகிறேன்'' என்று படு சீரியஸாகச் சொன்னதும் எல்லோரும் 'கொல்'லென்று சிரித்து விட்டனர்.

**பி. திருவேங்கடம், சென்னை-80**

### குதித்து வந்த குட்டி கிருஷ்ணன்

கிருஷ்ண ஜயந்திக்கு மாக்கோலத்தில் கிருஷ்ணன் பாதம் போட்டிருந்தேன். அப்பா ஆபீஸிலிருந்து திரும்பியதும் கேட்டார். ''என்னம்மா நம்ம வீட்டுக் கிருஷ்ணர் குதித்துக் குதித்துத்தான் வருவாரோ?''

அப்புறம் தான் உணர்ந்தேன். இரண்டு பாதங்களையும் அருகருகே போடாமல் ஒன்று முன்னதாகவும் ஒன்று பின்னதாகவும் போட்டால் தான் நடந்து வரும் அடிச்சுவடுகள் போல் இருக்கும் என்று.

**ராஜலட்சுமி, ஸ்ரீதரன், சென்னை-17**

### அலுவலகச் சிரிப்பு

அலுவலக மீட்டிங்குக்கு காபிக்குப் பதில் போர்ன்விடா வாங்கி வரச் சொல்லிச் சிப்பந்தியிடம் பத்து ரூபாய் கொடுத்தேன். சற்றைக்கெல்லாம் போர்ன்விடா டின்னுடன் வந்த அவன், ''இன்னும் ஏழு ரூபாய் தர வேண்டும் சார்'' என்றான். (இது எட்டு ஆண்டுகளுக்கு முன் நடந்தது. அதனால் போர்ன்விடா விலை கம்மி.)

**நா, கோவிந்தராஜன், நாகர்கோவில்-2**

### என்னடி மீனாட்சி

மீனாட்சி என்பவர் மாற்றலில் மறுநாள் எங்கள் ஆபீஸில் சேர இருந்தார். அவசரக் குடுக்கையாய் அவருக்கு பெண்கள் ஹாஸ்டலில் அறை எடுத்து விட்டேன். மறுநாள் வந்தார், நியூமராலஜிக்குக் கட்டுப்பட்டு மீனாட்சியாயிருந்த மீனாட்சிசுந்தரம்.

**என். பாலு, திருச்சி-18**

### மாட்டிக்கொண்ட மாமனார்!

நண்பகல் உணவுக்குப் பிறகு சற்று கண் அயர்ந்தேன். சமையலறை திக்கிலிருந்து 'சிலீர்' என்று கண்ணாடி உடையும் சப்தம் கேட்டு வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து வால் பசங்களை ஒரு அதட்டு அதட்டினேன். பதிலேயே காணோம். சமையலறைக்குப் போய்ப் பார்த்தால் மாமனார் திருதிருவென்று விழித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்.

**ஆர். உமா, குளித்தலை**

### பொலிவுக்கொரு பல்பொடி

அண்ணாவின் கல்யாணம். மாப்பிள்ளை அழைப்புக்கு நேரமாகிவிட்டது என்று அவசர அவசரமாகப் பவுடரை எடுத்து முகத்தில் பூசிக்கொண்டேன். அருகிலிருந்த என் தங்கை பவுடரை தட்டி விட்டு டப்பாவைத் தூக்கிக் காண்பித்தாள். அதில் பல்பொடி என்ற எழுத்துக்கள் பளீரென்று சிரித்தன.

**விஜயா ஈசுவரன், ஆறுமுகனேரி**

### விசில் வீரர்கள்!

இறங்க வேண்டிய ஸ்டாப்பிங்கைத் தாண்டி விட்டது பஸ். அழைப்பு மணி வேலை செய்யவில்லை. கண்டக்டரிடம் அவசர அவசரமாக 'விசிலடியுங்கள் விசிலடியுங்கள்' என்று கத்தினேன். பின்னால் நின்று கொண்டிருந்த கல்லூரி மாணவர்கள் இதுதான் சமயம் என்று விண்ணதிர விசிலடிக்கவும் பஸ் உடனே நின்று விட்ட து. பயணிகள் எல்லோருமே சிரித்து விட்டனர்.

**டி. புஷ்பலதா, வாலாஜாபாத்**

### படிக்காத மேதை!

எங்கள் முதலாளி ஒரு படிக்காத மேதை. இருந்தாலும் படிப்பாளி போல் காட்டிக் கொள்வார். ஒரு நாள் 'டேய் இங்கிருந்த பீப்பாய் எங்கே' என்று ஒவ்வொருவரையும் அதட்டலுடன் விசாரித்துவிட்டுப் போனார். பிறகுதான் புரிந்தது அவர் கேட்டது 'மப் பாய்' யை என்று.

**கே. எஸ். வேலுச்சாமி, சேலம்-1**

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

**கே. வி. பாஸ்கரன்**

*29, ஈஸ்வரன் கோயில் தெரு,*
*மாங்காடு—602 101.*

## அத்தியாயம் 22

### உக்கிரப்பயணம்

"திருமேனி! உள்ளே ஓடிச் சென்று கதவை மூடிக் கொள்!''

ஓங்கிக் குரல் கொடுத்துக் கத்துகிறான் வேங்கைமார்பன்.

எதிர்பாராமல் நடந்து விட்டது. அவன் எரிதழலில் அகப்பட்டுக் கொண்டவன்போல் துடியாய்த் துடித்து வேங்கைகளை அடக்க எதிர்நோக்குகிறான்.

திருமேனிக்கு அதிர்ச்சியால் வியர்த்துக் கொட்டியது. செய்வதென்னவென்று தோன்றாது விழித்த அடுத்த கணமே, ஓர் ஆவேசம் கண்டவளே போன்று தியாகவல்லி முனைந்து திருமேனியைத் தள்ளிச் சென்று பளிங்கு மாளிகையுள் விட்டுக் கதவைச் சாத்தி வெளித் தாழ்ப்பாளிட்டு அங்கேயே நெடுமரமாய் நின்று கொண்டிருந்தாள். அவளது உடலும் தெப்பமாக அந்தக் கணங்களில் நனைந்து போயிற்று.

எது நடந்தாலும் நடக்கட்டும் என்று எதிர் நோக்குகிறவளைப் போலத் துணிவாக நிற்கிறாள் தியாகவல்லி.

சீறிப் பாய்ந்து வந்த வேங்கைகள் நேரே மாளிகைப்படியேறி வந்து உறுமுகின்றன. பின்னர், திருமேனிச் சிலையருகே செல்வதும், மீண்டும் ஓடி வருவதும், ஒன்றன் பின் ஒன்றாக வளைய வந்து உறுமுகின்றன.

மாளிகையுள் நுழைந்து விட்ட திருமேனிக்கு மார்பகமே வெடித்துவிடும் போலிருந்தது. அவள் மாளிகைக் கதவின் உட்தாழ்ப்பாளிட்டுக் கொள்கிறாள்.



மெல்ல மெல்ல வேங்கைகளை அணுகி வருகிறான் வேங்கை மார்பன்.

அவற்றின் கோபம் என்ன? அதனால் கண்ட வெறி என்ன? ஏனிப்படி அலைமோதுகின்றன? அவற்றின் மனநிலையை முற்றுமாக அறிந்த வேங்கைமார்பன், "ராஜா!'' என்று குரல் கொடுத்து ஆண் வேங்கையைத் தடவிக் கொடுக்க...

இயல்பாகப் பெண் வேங்கையும் அவனிடம் வந்து அதன் பாஷையில் சன்னமாக உறுமி அவனது முகத்தில் முகம் வைத்து உரச, "ராணி, ராணி!'' என்று அன்புடன் தடவி விடுகிறான்.

மாளிகையின் சாளரங்களிலிருந்து இந்தத் துணிவு மிக்க காட்சியைக் கவனிக்கிறாள் வியர்த்துக் கொட்டிப் போன வேல்நெடுங் கண்ணி திருமேனி.

ஆ! இந்தக் கொழுத்த வேங்கைகளுடன் இப்படி ஒரு சகவாசமா? இதனால் தான் இவ்வாறு பெண்ணைச் சிறையெடுக்கிற மிருக புத்தி வந்ததோ?

அந்த நிலையிலும் கூட அவள் வேங்கை மார்பனைத் தூற்றுவதில் அமைதி காண்கிறாள்.

வேங்கைகள் வெறியடங்கிச் சமநிலை கொள்கின்றன. 'இத்தனை நாட்களாக எங்களை அறையில் அடைத்து வைத்துச்

## கோவி. மணிசேகரன்



சோதிக்கலாமா?' என்பது போல உறுமு கின்றன.

அஃறிணைப் பாசங்களே ஒரு தனி யான உயிரியல் தத்துவங்கள்...

தியாகவல்லி, கதவை விட்டு மெல்ல வேங்கைகளிடம் வந்து நெற்றியைத் தடவு கிறாள். ஆ! இவளுக்கும் மிருக புத்தி இருந்த தால் தான் கூடவே இருந்து குழி பறித்தாள் என்று சபித்துக் கொள்கிறாள் திருமேனி.

சபித்துக் கொண்ட அடுத்த கணமே தனது சபிப்புக்குக் காரணமே இல்லை என் பது போலவும் நாணப்படுகிறாள்.

சீ! தியாகவல்லி ஒரு பரிசுத்தமான பாத் திரம் என்பதை இதன் மூலம் நிரூபித்து விட்டாள். அவள், அத்தான் வேங்கை மார்பன் தேவையென்று எண்ணியிருந்தால், இப்படித் தன்னைக் காப்பாற்ற முயன்றிருப் பாளா? விழுங்கட்டும் வேங்கைகள் என்றல் லவா வேடிக்கை பார்த்திருப்பாள்...

தியாகவல்லியைப் புரிந்து கொண்டதில் அவளது வைகையாற்று 'சகோதர' வாதத் துக்குச் சற்றே தீர்வு கண்டாலும், அந்தரங் கத்தில் மட்டும் வேங்கைமார்பன் ஓர் அரக்கன் போல உருக் கொண்டு விட் டானே!

வேங்கைகள் அடிக்கடி மாளிகைக்கதவு களைத் தட்டுவதும், ஓடிச் சென்று திரு மேனிச் சிலையை அண்ணாந்து நோக்கி, உறுமி, வலையவந்து ஓடி வருவனவாகவு மிருக்கின்றன.

வேங்கைமார்பன் இந்த வேங்கை விளை யாட்டைக் கவனிக்கிறான்...

''தியாகவல்லி! திருமேனியின் சிலை யுருவம் இவற்றுக்குப் பழக்கப்பட்டுவிடவே, திருமேனியைக் கண்ட பிறகு மோப்பத் துடன் அலைமோதுகின்றன.'' என்றான்.

''ம்ஹூம்! விளையாட்டு வேண்டாம். எனக்குத்தான் கேட்பாரில்லை; மெய்ப்பா கில்லை. அவள் ஒரு சாம்ராஜ்யாதிபதியின் திருமகள்! சிறையெடுத்ததே பல மன்னர் களுக்கு இந்நேரம் முணுமுணுப்பில் சொற்கள் விருந்து சமைத்திருக்கும். வேங்கை களால் ஏதேனும் நிகழுமானால் தமிழகத்தின் பகைமையையே சம்பாதித்துக் கொள்ள நேரிட்டுவிடும். திருமேனித் திருமணம் நல்ல முறையில் முடியட்டும். வேங்கை களுக்குத் தங்கள் மகாராணி மீது இயல்பா கவே விசுவாசம் ஏற்பட்டு விடும்!''

''அது மட்டும் கனவில் கூட நடை பெறாது தியாகவல்லி!''

இருவரும் திரும்பிப் பார்க்கிறார்கள்.

சாளரத்து வழியாகக் காதுகளைக் கூர் தீட்டிக் கொண்டிருந்த திருமேனியின் திருத்தமான மறுமொழி, வேங்கைமார்பனை வேதனையுறச் செய்தது.

அவன் மெல்ல எழுந்து சாளரத்தை நாடி வருகிறான்.

வேங்கைகளும் அவனைப் பின்பற்றி வரு கின்றன.

''திருமேனி! இன்னுமா நீ என்னைப் புரிந்து கொள்ளவில்லை?''

நெட்ட நெடிய பெருமூச்சு விடுகிறான் வேங்கைமார்பன்.

''என்னரும் ஜீவசித்திரமே! எனது செயலை நீ அநாகரீகமாகக் கருதி வெறுக் கிறாய்; சிலை செய்து, ஏன் மாலையணிவித் தேன்? அநியாயமாக விதி 'சகோதரம்' என்ற சொல்லைப் பயன்படுத்தி விட, அதிலிருந்து நீ மாறுபடுவாய் என்பதற்காகத் தான்! ஏன் சிறையெடுத்தேன்? காலம் முழுவதும் கன்னியாகவே இருந்து நீ கன்னித் தமிழை வளர்க்க முடிவு செய்து விட்டாய் என்று கேள்விப் பட்டதால்! நீ எனக்கு மனைவியாகி, தமிழ்ச் சங்கத் தலைவியானதில் எனக்கொரு சரித்திரப் பெருமையுண்டு! ஆனால் என்னை ஒரு ரகசிய ராட்சஸனாக எண்ணி வெறுத்ததால் நான் இந்தச் செயலில் ஈடுபட நேர்ந்தது. சொல் திருமேனி! நான் ராட்சஸனா?''

''இல்லை.''

மகிழ்ச்சியோடு கண்களை மூடித் திறக் கிறான் வேங்கைமார்பன். உதடுகளில் புன்னகை.

''இதற்குள் மகிழ்ந்து கொள்ளவேண் டாம்! நான் இன்னும் முடிக்கவில்லை. ராட்சஸன் என்பவன் நல்லவன் என்பதை நீங்கள் நிரூபித்து விட்டதால் உங்களை ராட்சஸன் இல்லை என்றேன்!''

திறந்த கண்களை மீண்டும் மூடுகிறான் வேங்கைமார்பன். திருமேனி...!

'ஏ, வேங்கைமார்பா! உனது மாகீர்த்தி, மகோன்னதப் பெருமை, மகத்தான ஆண்மை காதல் பொருட்டு எட்டி உதைக்கப் படுகின்றன...

'உனது வீரத்தை அது கசப்பாக விமர் சனம் செய்கிறது...

'பூமியின் நிலவு என்று கருதிய அழகுப் பேரொளி, உன்னைச் சூரிய வதை செய் கிறது; சூரசம்ஹாரம் புரிகிறது...'

மனத்தில் இந்த அவலமான ஓலத்துடன் கண்களைத் திறக்கிறான்...

இமைகள் ஈரக்கவிதை எழுதுகின்றன.

நாவுலர்ந்து விட்டது. உலர்ந்த நாவிலிருந்து சொற்கள் சருகுகளாய் உதிர்கின்றன:

"திருமேனி! ஒன்றைச் சொல்வேன்! சத்திய ஜீவனுள்ள எனது காதல் தீபத்துக்கு நான் அணையாத திரிகளை ஏற்றிவிட்டேன்! அந்த ஒளியில் வாழ்க்கைக் காப்பியம் படிப்பேன் என்பது எனது எதிர்பார்ப்பு! இந்த வேங்கைவனம் நமது பூரண வாழ்வரங்கமாக விளங்க வேண்டும். இல்லை, நம்மிருவரையுமே விழுங்கி மகிழும் புதைகுழியாக மாற வேண்டும்! இரண்டில் நீ எதைத் தேர்ந்தெடுத்தாலும் நான் மகிழ்வேன்!"

ஒருகணம் இமைகளை மூடித் திறக்கிறான் வேங்கைமார்பன். மேலும் ஈரம் கசிந்து காணப்படுகிறது. "வைகைக்கரையில் அணைத்த அந்த ஒரு ஸ்பரிசமே இந்தப் பிறவியில் போதுமென்றாலும், இருவருக்குமே இது பொருத்தமாகும்."

வேங்கைமார்பன் விறுவிறுவென்று அரண்மனை நாடி விரைகிறான்.

வேங்கைகள் குரல் கொடுத்துத் தலைவனை அழைக்கின்றன.

"தியாகவல்லி! வேங்கைகளை அடைக்க முடியாதா?" என்றாள் திருமேனி.

"வேந்தனுடைய உத்தரவு வரவேண்டும்!" என்றாள் தியாகவல்லி.

"நான் உத்தரவிட்டால்?"

"வேங்கைராணி உத்தரவிடுகிறேன் என்று கம்பீரமாகச் சொல்லுங்கள்! அடுத்தகணமே உங்கள் உத்தரவை இந்தக் கானப்பேரெயில் சிரமேல் கொள்ளும்!"

திருமேனியின் விழிகள் தியாகவல்லியைச் சபிக்கின்றன.

வேங்கைராணியாக வேண்டுமாமே!... இனியும் இது நடைபெறுகிற காரியந்தானா? எனது தந்தை இந்நேரம் தூங்கிக்கொண்டிருக்க மாட்டார்!

இந்த வேங்கைவனத்தைத் தூளாக்குவதில் ஈடுபட்டுக் கொண்டிருப்பார்....

எனக்கு மணமும் வேண்டாம்; மணாளனும் வேண்டாம்! மாதவத்துக்குரிய தமிழ் போதும்! அதன் சங்கம் போதும்! சங்கத்துத் தலைமைப் பதவி போதும்!

அப்பா...

திருமேனி இங்கே 'அப்பா' என்று மனத்துள் அழைத்துக் கொண்டதுபோலவே, மதுரை அரணமனையில் 'மகளே' என்று அரற்றிக் கொண்டிருக்கிறார் உக்கிரப் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர்.

மாங்குடி மருதனாரின் இழப்பு ஒரு மாபெரும் இழப்பானாலும் அவர் கூறிச் சென்ற கடைசி வரிகள்...

"தமிழ்ச் சங்கம் மீண்டும் கூடவேண்டுமானால் திருமேனி தேவை..."

அதற்கு ஒரே வழி...

அவரே கானப் பேரெயில் நோக்கிப் புறப்படுவது என்று முடிவு செய்து விட்டார்.

அந்தப் பயணமும் பாதையை மறிக்குமேயானால்...

யுத்தம் மூளுவதை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது...

இதற்காகப் பல மந்திராலோசனைகள் கூடி எத்தனையோ முடிவுகள் அரும்பின; எத்தனையோ முடிவுகள் அழிக்கப்பட்டன.

கானப்பேரெயில் கோட்டை அவர்களைக் கலங்க வைத்துக் கொண்டிருந்தது.

கானப்பேரெயில் வேங்கைமார்பனுக்கு உதவக் கூடிய குறுநில அரசர்கள் யார் என்பதும் தெரியும்...

பாண்டியருக்குச் சோழரும், சேரருமான வல்லரசுகள் துணை நின்றால்...

ஆனால் பாண்டிய மன்னர் இப்போதைக்கு அந்த வல்லரசுகள் தயவு வேண்டாம் என்றே முடிவு செய்தார். ஒரு சிற்றரசனை வீழ்த்த மூன்று வல்லரசுகளா?

இப்போதைக்குக் கானப் பேரெயில் கோட்டைக்குள் சில வல்லமை பொருந்திய பொறியியல் நிபுணர்களும், பலம் பொருந்திய மலையனைய மானுடர்களும் தேவை! யவனர்களும் *சோனகர்களும் தான் இதற்குச் சரியானவர்கள்.

பூம்புகார்க் கடற்கரைப் பட்டினத்திலிருந்து பதினைந்து யவனப் பொறியாளர்களையும், காந்தளூர்ச் சாலையிலிருந்து இருபது சோனக முரடர்களையும் முறையே சோழனும் சேரனும் அனுப்பி வைத்திருந்தனர்.

சிலரைத் தம் வசத்திலும் சிலரைத் தம்முடன் வேங்கைவனம் நோக்கி அழைத்துச் சென்று விட்டு வரவும் முடிவு செய்து அனைவரையும் அழைத்துக் கொண்டு புறப்

* கிரேக்கர்கள்; அராபியர்கள்

### அர்த்தமும் அ(ன)ர்த்தமும்!

உண்மை: "இரங்கற் கூட்டத்தில் மிக அபூர்வமான ஒன்று!"

நினைவுகள்: "கிழவர்கள் உடைந்த பொம்மைகளைக் கொண்டு விளையாடும் நர்சரி பள்ளி."

நன்னம்பிக்கைக்காரர்: "50 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள வீட்டை, 50 ஆயிரம் ரூபாய்க்கே கட்டி முடித்து விடலாம் என்று நினைப்பவர்!"

வங்கியில் உள்ள பணம்: "பற்பசை 'டியூப்' போன்றது. வெளியே எடுத்து விடுவது மிகச் சுலபம் — ஆனால் உள்ளே போடுவது... மிகச் சிரமம்!"

...ராபர்ட் ஆக்கர்ஸ்ட்ராம்.

—சம்பத்குமாரி.

ஆதாரம்: மிர்ரர்



பட ஆயத்தமானார் பாண்டிய மாமன்னர் உக்கிரப் பெருவழுதி.

அந்தக் கோட்டையை நேரில் சென்று கணிப்பதில் அவரது கவனம் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது. அப்பேர்ப்பட்ட கோட்டையாமே அது!

அரண்மனைக்கு வெளியே ராஜரதம் நின்று கொண்டிருக்கிறது.

உடன் புறப்பட்ட நூறு தேர்த்தவீரர்கள். நான்கு மெய்க் காப்பாளர்கள்.

மகாசேனாதிபதி காவிதி அழகன் நம்பியிடம் யுத்தம் மூளுமானால் என்னென்ன ஏற்பாடுகள் எவ்வாறு நடைபெற்றிருக்க வேண்டும் என்பதை இரவே ஓரளவு விளக்கி இருந்தார். பேரளவு விளக்கம் வேங்கைவனம் சென்று திரும்பிய பிறகுதான்!

நேரே தமது தேவியைக் காணச் செல்கிறார் உக்கிரப் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர்.

அந்தப்புரத்தை விளக்குகள் அழகு படுத்திக் கொண்டிருந்தன.

பாண்டிமாதேவி பாதியாகி விட்டிருந்தாள்.

மகளைப் பிரிந்து அதுவரை அவள் உயிர் தரித்து இருப்பதே அதிர்ஷ்ட வசம் என்று எண்ணிய பாண்டிய மாமன்னர்; தேவியைத் தேற்றிவிட்டுப் புறப்பட்டார்.

''வேங்கைமார்பன் உங்களை மரியாதையுடன் வரவேற்பானா பிரபோ?'' என்றாள், பாண்டிமாதேவி.

உக்கிரப் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர் முகத்தில், உதடுகள் அகமாயும் கண்கள் புறமாயும் காட்சி தருகின்றன.

''தேவி! காதல் வெறியில் அவன் குருடனாகி விட்டானேயொழிய பண்பாட்டில் அவன் மூன்றும் கண்ணுடையவன்!''

''கூடிய வரையில் சமாதானத்தை மேற்கொள்ளுங்கள். திருமேனியின் பிடிவாதம் சரியில்லை என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள்!''

''முடிந்தவரை முயல்வேன்! வேங்கை மார்பனுக்குத் திருமேனி தலைவியாகிறாளோ இல்லையோ, எனது ஞானகுருவானமாங்குடி மருதனார் வாக்கைக் காப்பாற்ற தமிழ்ச் சங்கத் தலைவியாவாள்! இது சத்தியம்!''

பாண்டிய மாமன்னர் புறப்படுகிறார். மங்கல வாத்தியங்கள் எங்கும் முழங்குகின்றன.

நூறு படை. வீரர்களுடன் சோழநாட்டிலிருந்து வந்த யவனர்களும், சேர நாட்டிலிருந்து வந்த சோனகர்களும் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுக்கிடப்பட்ட உத்தரவே செய்கிற காரியம் சுமுகமாக முடிந்தால் திரும்பி வந்து விட வேண்டும். வக்கிரமாக ஏதேனும் வந்து முளைக்குமேயானால், குறிப்பிட்டவர்கள் கானப்பேரெயிலிலேயே தங்கி, வேங்கைவனவாசிகளாகிக் கோட்டையைத் தகர்ப்பது பற்றி முயன்று முடிக்க வேண்டும். யவனர்களில் நூவர் மட்டும் கோட்டையை நோட்டம் விட்டு அதனை முறியடிக்க மதுரைக்கு வந்து மார்க்கங்களை உருவாக்க வேண்டும்.

பாண்டியப் பேரரசின் பேரிகை முழங்குகிறது.

ராஜரதத்தில் ஏறியமருகிறார் உக்கிரப் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர்.

எங்கும் வாழ்த்தொலிகள்...

ரதம், வேங்கைவனம் நோக்கிப் புறப்பட்டது.

(தொடரும்)

# நடிகை

எதிர்த் திண்ணையில் தவிப்புடன் சாய்ந்து நின்று கொண்டிருந்த தன் வேலைக்காரி மனோரமாவிடம் எரிச்சலுடன் இட்டி நொறுக்கிக் கொண்டிருந்தாள் மேகலா.

''...அவுட்டோர் ஷுட்டிங்னாலே, இதான் எனக்கு அலர்ஜி... கன்டின்யூயிடி காஸ்ட்யூமை மறந்துட்டு, என்ன ஷுட்டிங்குக்கு வர்றது... ப்ரொடக்ஷன் மானேஜர் என்னத்துக்கு இருக்கான்... சை! இந்தச் சேரிலே எவ்ளோ நேரம் ஒக்காந்துக்கிட்டு இருக்கிறது...''

கையைப் பிசைந்து கொண்டு நின்று கொண்டிருந்தாள் மனோரமா. ஏதாவது பேசினால், மேகலாவின் கோபம் அதிகமாகுமென்று அனுபவம் எச்சரித்ததால் மௌனமாக நின்று கொண்டிருந்தாள்.

பெரிய பேனர் கம்பெனியின் படம்.

செல்வாக்குப் பெற்ற டைரக்டரின் படம்.

உச்சகட்டக் காட்சிகளை ஒரு கிராமத்தில் படமாக்க வேண்டுமென்று மதுரையிலிருந்து போடி செல்லும் மார்க்கத்திலுள்ள ஒரு குக்கிராமத்தைத் தேர்ந்தெடுத்திருந்தார் டைரக்டர். கிராமத்து மக்கள் வாழ்க்கையை மிக யதார்த்தமாய்ப் படமாக்குகிறவர் என்ற பெயர் பெற்ற டைரக்டர். எனவே அவர் பேச்சுக்கு மறுபேச்சுப்பேச முடியாத நிலை. அது மட்டுமல்ல, மேகலாவுக்கு அருமையான ரோல். ஊர்வசிப்பரிசு வாங்கித் தரும் என்று விஷயமறிந்தவர்கள் மேகலாவிடம் சொல்லியிருந்தார்கள். பணக்காரக் குடும்பத்தில் பிறந்து, ஏழை விவசாயியைக் காதலித்து, தன் செல்வம், செல்வாக்கு, நவீன வசதிகள் ஆகிய எல்லாவற்றையும் துறந்து, கிராமத்துக்கு வந்து விவசாயக் கணவனுடனும், வெள்ளை மனம் கொண்ட சேரி மக்களுடனும், இரண்டறக் கலந்து, அவர்களுடனே வாழ்கிற ஒருபெண்ணின் கதை. 'அந்நிய மகரந்தங்கள்' என்று பெயர் வைத்திருந்தார்கள். அவளுக்குத்தான் கதாநாயகி வேடம். இப்போது தான் முன்னணிக்கு வந்து கொண்டிருந்ததால், மிகுந்த நம்பிக்கைகளுடனும், எதிர்பார்ப்புகளுடனும் நடித்துக் கொண்டிருந்தாள். சில உச்சக்கட்டக் காட்சிகளைக்கிராமத்தில்சேரியில் படமாக்க வேண்டும் என்று தயாரிப்புக் குழு முதல் நாள் போக, மறுநாள் காலை மேகலா, தன் வேலைக்காரிமனோரமாவுடன்அந்தச்சேரிக்குப்போய்ச்சேர்ந்தாள். நல்ல வெய்யில் இருந்தும் படமாக்க முடியாமல், மிகவும் முக்கியமான கன்டின்யூயிடி காஸ்ட்யூமை மறந்து விட்டு வந்ததால், சிரமப்பட வேண்டியதாயிற்று. படமோ வண்ணப்படம். அந்த உடைகளையும், அவைகளின் நிறத்தையும் வைத்து ஒரு முக்கியமான 'டைரக்டோரியல் டச்'சுக்கு திட்டமிட்டிருந்தார் டைரக்டர். 'காஸ்ட்யூம்தானேய்யா, அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்' என்று உதவி டைரக்டர் அலட்சியமாக இருக்க, வந்தது ஆபத்து. ஸ்பாட்டுக்கு வந்து, அந்த காஸ்ட்யூம் இல்லையென்றதும், டைரக்டருக்குக் கோபம் தலைக்கேறியது. வாயில் வராத கெட்ட வார்த்தைகளால் உதவி டைரக்டரைச் சாடிவிட்டு, 'அதுவந்தாக வேண்டும்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். உதவி டைரடக்டரும், ப்ரொடக்ஷன் மேனேஜரும் போயிருக்கிறார்கள். அது வந்ததும் படமாக்கவேண்டும். ஒரு சுமாரான வீட்டை மேகலாவுக்கும் மனோரமாவுக்கும் ஏற்பாடு செய்திருந்தார் டைரக்டர். அவர் மகாக்கோபத்தில் இருந்ததால், வேறு எதுவும் சொல்லப் பயமாயிருந்தது மேகலாவுக்கு. பல்லைக் கடித்துக் கொண்டு அந்தச் சேரியில் சில மணிநேரங்களைக் கழித்தாக வேண்டிய கட்டாயம்.



''இதோ பார்த்தியா... இவுகதான்... நாஞ் சொல்லேயிலே நம்ப மாட்டேன்னியே'' என்று அவளை நோக்கி விரலைக் காட்டிக் கொண்டே இரண்டு மூன்று சிறுவர், சிறுமியர் அந்த வீட்டிற்குள் நுழைந்தனர்.

வற்றலாய்க் கறுப்பு உடம்பு. இடுப்பில் துணியிருந்தால் மேலே இல்லை. மேலே இருந்தால் இடுப்புக்குக்கீழ் காற்றுடியது. எண்ணெயைப் பார்க்காத சிக்கல் முடி. இப்படி நாலைந்து வாண்டுகள் அவளைப் பார்த்து வாயைப் பிளந்து கொண்டு நின்றன. சற்றுப் பெரியவனும் இருந்த பையன்தான் சொல்லிக் கொண்டிருந்தான்.

''எங்க வூட்டுக்கு சினிமாக்காரவுங்க வந்திருக்காங்கன்னு சொன்னப்போ நம்பமாட்டேன்னியே ... இப்பப் பார்த்துக்க...''

குரலில் பெருமிதம் பொங்கிற்று..

''ஹை!... அளகா இருக்காங்களே!''

''தலையிலே எம்புட்டுப் பூவு!...''

''எங்க வீட்டுக்கு வருவாகளா...''

''ரஜினி கூட நடிச்சிருக்காகளா...''

''சிவாஜி கூட...''

''சீதேவியைவிட அளகா இருக்காகள்ளே''

''சீ...! சீதேவிதான் இவுகளைவிட அளகு...''

''இல்லை...''

''ஆமாம்...''

''போடாக் கழுதை! இவுக தான் அளகு...''

''நீ போடி நாயி! சீதேவிதான் இவுகளைவிட அளகு...''

கட்டிப் புரண்டார்கள். ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டார்கள். கூச்சல் எழும்பிற்று.

''இப்ப எல்லோரும் வெளியே போறீங்களா ...இல்லே, கழுத்தைப் பிடிச்சுத்தள்ளட்டுமா ... மனோரமா... இதுகளை அடிச்சு வெரட்டு... சனியனுக!... வந்ததுலேர்ந்து இதே வேலையாப் போச்சு...''

எரிச்சலுடன் கத்தினாள் மேகலா.

''இல்லேக்கா வந்து...'' என்று அவர்களை அழைத்து வந்த சிறுவன் ஏதோ கூறத் தொடங்க, ''அக்காவுமாச்சு, சொக்காவும் ஆச்சு... போடா...'' என்று பாய்ந்த மேகலாவைக் கண்டு மிரண்ட அந்தச் சிறுவன் தன் சகாக்களை அழைத்துக்கொண்டு தயங்கித் தயங்கி வெளியேறினான்.



அழுக்காய்க் குடிசைகள். அதைவிட அழுக்காய் மனிதர்கள். வாலைச் சுழற்றிக் கொண்டு பன்றிகள் ரீங்காரமிட்டன. கோழிகள். ஆடுகள். நிமிடத்திற்கு ஒரு முறை ஏதோ ஒரு கோழியைச் சேவல் துரத்துவதை எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருப்பது? முதலில் ஒன்றிரண்டு தடவை, அந்தக் கோழியைச் சேவல் பிடித்து விட்டதா என்று ஆர்வத்துடன் வீட்டிற்கு வெளியே வந்து பார்த்தாள். அப்புறம் அதுவும் அலுத்து விட்டது.

வியர்வை பொங்கிற்று.

மின் விசிறி கூட இல்லாமல் திணறிற்று.

அவளைப் பார்வையாலேயே புரிந்து கொண்ட மனோரமா, ''காத்தே வரமாட்டேங்குது. கொஞ்சம் காலாற நடந்து போயிட்டு வருவோமா...'' என்றாள்.

''வா...''

இவர்களைப் பார்த்து மிரண்டு சில பன்றிகள் குறுக்கும் நெடுக்கும் பாய்ந்தன. இவளைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் இரண்டு மூன்று எருமைகள் தம் போக்கில் போய்க் கொண்டிருந்தன. 'என் பவனி எப்படி' என்கிற மாதிரி ஒரு காக்கை எருமை மாட்டின் மீது உட்கார்ந்து மேகலாவை ஒருகணம் எச்சரிக்கையுடன் பார்த்தது. கனமாய்க் காற்றுத் தழுவிற்று.

அப்புறம் வயல். பச்சையாய்க் கொஞ்சம், காய்ந்து வறட்சியாய்க் கொஞ்சம். கருவேலஞ்செடிகள் தனித்தனியாய்த் தண்ணீருக்குத் தவம் செய்யும் வறண்ட பிரதேசம்.



சமீபத்தில் கமலஹாசனிடம் ஒருவர் கேட்ட கேள்வியும், அவர் அளித்த பதிலும்:

கேள்வி: இன்றைய முன்னணி நடிகர்களில் தங்களைக் கவர்ந்தவர் யார்?''

கமலஹாசன்: ''கேள்வியைப் படிக்கும் போதே நான்,நேற்றைய நடிகன் என்பதை உணர்ந்தேன்...''

ஆதாரம்: தினகரன்

தகவல்: .ஆர். வசந்தகுமார்



தொலைவில் ஒரு மலை. ஒரு நிறை கர்ப்பிணி மல்லாந்து படுத்துக் கொண்டிருப்பது மாதிரி. 'விச், விச்' என்று ஏதேதோ பறவைகள் கத்திக் கொண்டிருந்தன. ஓர் அணிலும், ஓணானும் ஓட்டப் பந்தயம் நிகழ்த்துகிற மாதிரி ஓடின.

அலுத்துப் போயிற்று மேகலாவிற்கு.

நம்மூராய் இருந்தால் வீடியோவில் எதையாவது பார்த்துக் கொண்டிருக்கலாம் அல்லது தோழிகளுடன் டெலிபோனில் பேசிக் கொண்டிருக்கலாம் என்று நினைத்தபோதே, எரிச்சல் மேலும் அதிகமாயிற்று.

சாலையோரத்து ஓடையில் காவி நிறத்தில் தயங்கித் தயங்கித் தண்ணீர் நெளிந்தோடிற்று. ஒரு தண்ணீர்ப் பாம்பு தவளைக் குஞ்சு ஒன்றை வாயில் கவ்வியதையும், அது பின் கால்களை உதறிக் கொண்டு உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுக் கொண்டிருந்ததையும் ஓர் அச்சத்துடன் பார்த்தாள்.

காலடியில் பாம்பொன்று நெளிகிறமாதிரி மனம் அச்சப்படவும், ''சரி... போரடிக்குது... வா... போகலாம்...'' என்று மனோரமாவையும் அழைத்துக் கொண்டு திரும்பினாள் மேகலா.

வீட்டு வாசலில் கையில் மண்வெட்டியுடன் ஒரு கிழவரும், ஒரு கிழவியும் நின்று கொண்டிருந்தார்கள். 'என் மனத்தில் ஒளிவு மறைவு இல்லை' என்கிற மாதிரி அந்தக் கிழவியின் கையில் கூடையொன்று காலியாய் இருந்தது.

ஒரு சிறுமி — பதின்மூன்று பதினான்கு வயதிருக்கும் - கையில் ஒரு பையுடன் உட்கார்ந்திருந்தாள்.

இவளைக் கண்டதும் மரியாதையுடன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தான்.

''இவுக தான், நாயினு... ஆத்தா... இவுக பொட்டியைத்தான் நான் தூக்கிட்டு வந்தேன்...''

குரலில் பெருமை தொனிக்க அறிமுகம் செய்தான்.

''எங்கப்பா, எங்கம்மா...'' என்று மேகலாவுக்குத் தன் பெற்றோர்களை அறிமுகம் செய்தான்.

''பசும்பாலைக் காய்ச்சி எடுத்துக்கிட்டு வந்தேன்... கம்பு, அடை கொணுந்தேன்... சாப்பிடுறீங்களா...'' என்று அந்தக் கிழவி கேட்கவும், அவள் கையிலிருந்த பித்தளைச் சொம்பை ஓர் அருவருப்புடன் பார்த்தாள்.

ஐயோ...! என்ன அவஸ்தை இது... இவர்கள் அழுக்கும் பித்தளைப் பாத்திரமும், பாலும், கறுப்பாய், வட்டமாய் அடையென்ற பெயரில் ஏதோ வஸ்துவும்... இதையெல்லாம் யார் தின்பது?

மனோரமாவை உறுத்துப் பார்த்தாள்.

''அம்மா... எதையும் சாப்பிட மாட்டாக...! இன்னைக்கு விரதம்...'' என்று நாசூக்காக மறுத்தாள் மனோரமா.

'ஒங்களை ஒண்ணு சேக்கணும்னு ஓடியாந்தேன்... என் மவனுக்கு மேலுக்குச் சொகமில்லே தாயி! நெஞ்சு வலின்னு அனுவ நப்போ பெத்த வயிறு கொதிக்குது...: ஒரு நூறு ருவா இருந்தாக் குடுத்தியாணு.

நினைவூட்டுகிறோம்:

# கமலிடம் ஒரு கேள்வி



முடிவு தேதி: 27–9–84

பக்கத்து டவுனுக்குப் போயி வைத்தியம் பாத்துக்கிடத் தோதா இருக்கும்... ஏழைகளுக்கு ஒதவி பண்ணுறீங்கன்னு பேப்பர்லே படிச்சு எம் மவ — இதான் — சொல்லிச்சு... ஒதவி பண்ணுங்க தாயி...''

கண்கள் கசியக் கேட்டாள் கிழவி.

சரிதான். இது வேறா? இருக்கிற தொல்லை போதாதென்று பணச்செலவு வேறா? ஓசி வாங்குவதே வேலே! ஊரில் ஆயிரம் பேர் இருக்கிறார்கள். உடம்பு முடியாதவர்கள்! இவர்களுக்கு உதவுவது என்று ஆரம்பித்தால், தலையில் துண்டைப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான்...

''...பணமெல்லாம் இடையாது.. வேறே யாரையாவது பாருங்க... எங்கம்மாவுக்குத் தலைவலி... எல்லோரும் வெளியே போங்க... ஊம்... ஊம்... சீக்கிரம்...''

மேகலாவின் பார்வையில் தெரிந்த உஷ்ணத்தை மனோரமாவின் சொற்கள் வெளியிட்டன.

''டைரக்டர் கூப்பிடுறாரு... காஸ்ட்யூம் வந்தாச்சு... சீக்கிரம்... வெய்யில் கொறையறதுக்குள்ளே ஷூட் பண்ணணும்னு டைரக்டர் அவசரப்படுத்தறாரு... சீக்கிரம் வாங்க...'' என்று உதவி டைரக்டர் சொல்லிக் கொண்டே வரவும், ''அப்பாடி .. பொழைச்சேன்... சீக்கிரம் ஷூட்டிங்கை முடிச்சுக்கிட்டு இந்த நரகத்தை விட்டு ஓடிரலாம்... ஏன்யா... என்ன அஸிஸ்டெண்ட் டைரக்டர் நீ... காஸ்ட்யூம் எலலாம் மறந்துட்டு... உயிரை வாங்கிட்டியேய்யா...'' என்று பெரிதாய்ச் சொல்லிக் கொண்டே ஸ்பாட்டுக்கு விரைந்தாள் மேகலா.

சென்னையில் நடிகை மேகலாவின் பங்களா.

சினிமாப்பத்திரிகையாளர்களுடன்பேட்டி. 'கிராமத்தில் அவுட்டோர் ஷூட்டிங் பற்றித் தனது அனுபவத்தை நடிகை மேகலா விவரிக்கிறார் என்று விளம்பரம் போன இதழ்களில் வெளியிட்டு, பேட்டிக்காக நிருபர்கள் ஆர்வத்துடன் காத்திருந்தார்கள்.

''அம்மா இதோ வர்றாக...'' என்று மனோரமா கட்டியம் கூற, தேவதையொன்று மிதந்து வருகிற மாதிரி மாடிப்படிகளில் கால் பாவியதே தெரியாமல் நடந்து வந்தாள் மேகலா.

பூர்வாங்க அறிமுகங்களும், சம்பிரதாய நகைச்சுவைகளுமாய்ச் சில நிமிடங்கள் கழிந்ததும், ஒரு நிருபர் விஷயத்துக்கு வந்தார்.

''சேரியிலே அவுட்டோர் ஷூட்டிங்லே ஒங்க அனுபவம் எப்படியிருந்துச்சு?...''

புன்முறுவலுடன் சிரித்துக் கொண்டிருந்த மேகலாவின் முகம் 'சட்'டென்று சீரியஸாகிப் போயிற்று. கண்களை ஒருகணம்மூடி, தியானம் செய்கிற மாதிரி 'போஸ்' கொடுத்த மேகலா கண்களைத் திறந்ததும் அவள் கண்கள் சிவந்ததைக் கூர்மையாய்க் கவனித்தார் ஒரு சிறப்பு நிருபர்.

''...அது ஒரு மறக்க முடியாத அனுபவம்... ஃபெண்டாஸ்டிக்... பசும் வயலும், வரப்பும், மலையும், சிற்றோடைகளுமாய் அற்புதமான இடம். அமைதியும், அழகும் கொஞ்சிய அந்தச் சேரியை விட்டு வரவே மனசில்லே... எல்லாவற்றையும் விட அந்த எளிமையான மக்களின் அன்புள்ளம் என்னை நெகிழ்த்தியது... வெள்ளை மனத்தோடு அவர்கள் என்னைப் பார்த்துச் சிரித்து உபசரித்த போது, அவர்கள் சிரிப்பில் இறைவனையே கண்டேன். அவர்கள் காய்ச்சிக் கொடுத்த பசும்பாலுக்கு மட்டும் ஏது, அவ்வளவு ருசி ... அது அன்பின் ருசியோ.. கம்பு அடை கொடுத்தார்கள். அமுதமாய் இருந்தது... படப்பிடிப்பு நிகழ்த்தியபோது, அந்த மக்கள் காட்டிய பாசமும்... ஓ! என் வாழ்நாள் முழுவதும் மறக்க மாட்டேன்..''

குரல் நெகிழ அவள் சொல்லச்சொல்ல, நிருபர்கள் உருகிப் போனார்கள். மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

மனோரமா இடைமறித்தாள்.

''...அம்மா சொல்ல வேண்டாம், பப்ளிசிடி கூடாதுன்னு சொன்னாங்க... இருந்தாலும் என் மனசுக் கேக்கல்லே... நல்லகாரியத்தை எதுக்கு மூடி வைக்கணும்... அந்தச் சேரியிலே ஒரு ஏழைக்கு நெஞ்சுவலின்னு அம்மா காதுலே பட்டதும் துடிச்சுப் போயிட்டாங்க... ஒடனே கையிலே இருந்த பணத்தைக் குடுத்து வைத்தியம் பாத்துக்கிட, டவுனுக்கு அனுப்பிச்சாக... ஷூட்டிங் முடிஞ்சு வாரையில கூட, அந்த ஆளு உடம்பைப் பத்தி விசாரிச்சுக் கிட்டுத்தான் வந்தாங்க...''

மேகலாவின் கண்கள் கலங்கியிருந்தன.

## போட்டிக்கதை: 4

# சில நியதிகள் மாறுகின்றன

ஸோமகன்

அந்தப் பெரிய கம்பெனி முன் வராந்தாவில் வரிசையாக விரித்துப் போடப்பட்டிருந்த மடக்கு நாற்காலிகளில் இளைய தலைமுறையினர் அமர்ந்திருந்தனர்.

வண்ண வண்ண உடையில் பதுமைகளாகப் பெண்கள். டையும், பூட்ஸும் மடிப்புக் கலையாத உடைகளுமாய்ச் சிற்பங்கள் போல் ஆண்கள். இருபாலாரின் முகங்களில் மட்டும் ஒரே மாதிரி உணர்ச்சிப் பிரதிபலிப்பு.

இந்த வேலை நமக்கெங்கே கிடைக்கப் போகிறது என்ற அபார அவநம்பிக்கை.

என்னாகுமோ என்ற பரபரப்பை அடக்கிக் கொண்டு அவஸ்தைப்படும் முகங்கள்.

வித்யா சிறிது நேரம் தோள் பையின் சுருக்கங்களில் படிந்திருந்த தூசைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டிருந்தாள். ஃபெமினாவைப் பிரித்து வேலைக்குப் போகும் பெண்களின் சங்கடங்களைப் படித்தாள். உம்! வேலை கிடைக்கும் முன்பே, வேலைக்குப் போவதால் ஏற்படும் துயர்களைப் பற்றி என்ன சிந்தனை என்று தனக்குள் எண்ணியவாறே நிமிர்ந்து சுற்றும் முற்றும் பார்த்தாள்.

தன் வரிசையின் எதிர்க்கோடியில் ஒரு வாலிபன் தன்னைப் பார்த்து நட்பு முறுவல் பூப்பது தெரிந்ததும் இவள் வேறுபுறம் பார்ப்பது போல் பாவனை செய்தாள். வெகுநேரம் அந்தப் பக்கம் திரும்பாமலும் இருந்தாள்.

''ஹலோ'' திடுக்கிட்டாள்.

அவன்தான்!

மகேஷ்!

''ஹலோ'' என்ற ஒலி எழுப்பாமல் உதட்டையசைத்தாள்.

''வரிசைப்படிதான் உட்கார்ந்திருக்கிறோம். நம்மைக் கூப்பிட அதிக நேரம் பிடிக்கலாம். இத்தனை பெரிய ஹாலுக்கு ஒரே ஒரு மின்விசிறி! இங்கு உட்கார்ந்திருப்பவர்கள் விடும் உஷ்ணப் பெருமூச்சால், இந்த ஹாலே வெப்பக் காடாகிவிட்டது... வாருங்களேன், அதோ அந்த மரத்தடியில் நிற்கலாம்...'' மகேஷின் குரலில் நட்பின் நயம் தெரிந்தது.

அவளால் மறுக்க முடியவில்லை. மனமில்லாமலேயே எழுந்து நடந்தாள்.

மரத்தடியில் காற்று சுகமாகவே வீசியது.

''என்ன சொன்னார்கள் என்னைப் பற்றி உங்கள் வீட்டில்?'' என்று பேச்சை ஆரம்பித்தான் மகேஷ்.

''வேலையில்லாத பட்டதாரிக்கு வெற்றிலைப் பாக்குக் கொடுக்க ஒரு மனைவியா? அப்படீன்னு சொன்னாங்க...''

''அடடே! புதுமொழி ரொம்ப அழகு! பை தி பை எனக்கு அப்படிச் சொல்லப்பட்டதில் வருத்தமில்லை. பத்தாவது முறையாக நான் இதுமாதிரி தாக்கப்பட்டிருக்கிறேன்.'' அவன் சொற்களிலிருந்த விரக்தி, புன்னகையில் கரைந்து கொண்டிருந்தது!

''உம்! பத்து முறைப் பெண்களைப் பார்த்து இனிப்பும், காரமும் சாப்பிட்டாச்சு, எனக்குத் தோணுது. 'ஆயிரம் முறை பெண் பார்த்தவன் அரை மாப்பிள்ளை'ன்னு சொல்லலாம்...!''

''ஓ! இன்னொரு புதுமொழியா... அத்தனை வீடுகளில் இனிப்பையும், காரத்தையும் தின்று விட்டு வேலையற்ற வெட்டிப்பயல் என்று புறக்கணிக்கப்படுகிறேனே...''

''அதிருக்கட்டும். நீங்கள் ஆண்கள் அதிகார வர்க்கமாகவே செயல்படுபவர்கள். பெண் பார்க்க வரும் நீங்கள், உபசரிக்கப்பட வேண்டியவர்கள். நாங்களெல்லாம் பார்க்கப்படுபவர்கள், மரியாதையை எதிர்பார்க்கக் கூடாதவர்கள் ஸார்...! ஆயிரம் பொன் வரதட்சிணை கொடுத்தாலும் மணப்பெண் மருமகள்தானேன்னு நினைக்கிற உலகம்...!''

''அடடே! இன்னொரு புதுமொழியா கவிதை எழுதுவீர்களா?'' அவன் கண்களில் மந்தகாசம் மிதந்தது.

''நெஞ்சக் குமுறலுக்குப் பேர் கவிதையா ஸார்!''

''அதுவே உண்மையான கவிதை!... போகட்டும், எத்தனை முறை பெண் பார்க்கப்பட்ட அனுபவம் உங்களுக்கு ''

''இருபதுமுறை! கண்ணடிப்பட்டு கண்கலங்கி, வாயடிபட்டு வாடிவதங்கி மறுப்புகள் வழங்கப்படும் போதெல்லாம் மரணத்தைத் தீவிரமாக நினைத்து மீண்டும்,



சமைப்பட்டுக் கொள்ளும் உயிருள்ள பிம்பங்களாக வாழ்கிறோம்... ஆனாலும் பாருங்கள், ஆண்களும், பெண்களும் சமம்னு பேர்...''

''வித்யா! ஒருவிதத்தில நாமெல்லாம் ஒத்திருக்கிறோம். அதுதான் இந்த வேலைக்கான நேர்முகத் தேர்வு! இதில் போட்டி கடுமை. வெற்றியோ மெல்லியவாளுக்கே! உங்களுக்கெல்லாம் அடுக்களைக்குள் நுழைய அகடவிகட சாமர்த்தியங்கள், தேவைப்படுகின்றன. அலுவலகத்தில் நுழையவோ அறிவு மட்டுமே போதும்!''

''தேங்க்ஸ் ஸார்! அலுவலகத்தில் வேலை செய்யும் பெண்களைப் பற்றிக் கேவலமாகக் கூடப் பேசுகிறார்கள். நீங்களாவது எங்கள் அறிவை ஒப்புக் கொள்கிறீர்கள்... வித்தியாசமானவர்தான் நீங்கள்...!''

''தேங்க்ஸ் வித்யா...! ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். ஆணானாலும் பெண்ணானாலும் இந்தக் காலத்தில் ஏமாற்றம் ஏற்படுவது சகஜம். எத்துறையிலும் நமக்குப் பிடித்ததை அடைய முடிவதில்லை. நமக்கு வாய்த்ததைக் கட்டி அழுவது தவிர வேறு வழியே இல்லாமற் போய்விட்டது...''

இதற்குப் பின் இரண்டொரு இண்டர்வியூக்களில் வித்யாவும், மகேஷும் சந்தித்துக் கொண்டனர்.

''அடுத்த நம் சந்திப்பு எப்போது வித்யா'' வேடிக்கையாகக் கேட்டான் மகேஷ்.

''அநேகமாக 'எலக்ட்ரானிக்ஸ் இண்டர்நேஷன'லில் சந்திப்போம்னு நினைக்கறேன்.''

''அதற்கு முன்தினம், ஷிப்பிங் கார்ப்பரேஷனில் ஒரு இண்டர்வியூ இருக்கே...''

''ஆமாம் மகேஷ்! அதை மறந்துட்டேன். அதற்கு அடுத்த நாள் தான் நான் சொன்ன இடம்.''

''ஹும்! இண்டர்வ்யூ நடக்கிற இடத்திலே சந்திச்சே நம் வாழ்நாள் ஓடிடும் போலிருக்கே...'' தன் ஏக்கத்தைத் தொட்டுக் காட்டினான் மகேஷ்.

''தினசரி இண்டர்வ்யூ எழவுக்குப் போறது தான் மிச்சம். கஞ்சிபோட்ட புடவை கட்டி, சீவி முடிச்சுச் சிங்காரிச்சுக்கிட்டுப் போறது. கசங்கிப் போன புடவையும் கலைஞ்சுப் போன தலையுமா திரும்பவர்றது. இதே தான் வேலை. இந்த அப்ளிகேஷனுக்கும், பஸ்ஸுக்கும் செலவழிக்கிறதாக இருந்தா...'' என்று அம்மா சலித்துக் கொள்ளும் போதெல்லாம், ''இருந்தா என்ன பண்ணுவே, அரண்மனை கட்டிடுவியா?'' என்று அவள் பேச்சுக்குப் பதிலளிப்பார் அப்பா.

ஆனால் இன்று வித்யாவே, ''இருந்தா என்னம்மா பண்ணுவே, என் கல்யாணத்தை நடத்திடுவியா?'' என்று பொரிந்தாள்.

சங்கரி எதிர்த்துப் பேசுவது புழுவாக இருந்தாலும் பயந்து போவாள். வாயை மூடிக் கொண்டாள்.

''யாரோ ஒரு அப்புசாமியோ, குப்புசாமியோ பாருங்கள் அப்பா. அவன் அட்டெண்டர் வேலை பார்த்தாலும் சரி, அடுப்பங்கரை வேலை பார்ப்பவனானாலும் சரி, எனக்குக் கல்யாணம் பண்ணி வச்சுடுங்கப்பா... உங்களுக்குப் பாரமா இல்லாம தொலைந்து போறேன்...'' குரலின் நடுங்கலில் கண்களின் ஈரம் புரிந்தது.

''பாருங்க... பாருங்க... என்ன சொல்லிட்டேன் அப்படி? என்னென்ன பேசறாப் பாருங்க...?'' முந்தானையால் கண்ணீரை ஒற்றிக் கொண்டாள் சங்கரி.

''சரி, சரி! வித்யா என்ன சொல்லிட்டாள். இந்தக் காலப் பெண்களின் வாழ்க்கையில் எத்தனையோ பிரச்னைகள், ஏமாற்றங்கள்... எந்த ஒரு முயற்சியிலும் ஆரம்பத் தோல்விகள் யாரையும் குணம் மாற்றி விடுதே...'' மனைவிக்கும், மகளுக்குமாக ஆறுதல் கூறினார் அப்பா.

அன்று ஷிப்பிங் கார்ப்பரேஷனில் இண்டர்வியூ. இவள் கிளம்பிப் படியிறங்கும்



போது தபால்காரர் ஒரு கவரை அவளிடம் தந்தார்.

அவளிடம் குபீரென்ற மகிழ்ச்சியின் பீறிடல். எந்தப் பெரிய கம்பெனியில் வேலை கிடைக்காது என்று நிச்சயமாக நம்பினாளோ, அங்கு வேலைக்கு அவளுக்கு ஆர்டர் வந்திருந்தது. •

ஒரு கணம்தான் அந்த ஆவல் பரபரப்பு.. ஒரே ஒரு கணம்தான்; ஓசைப்படாது கடிதத்தைத் தோள் பையில் பத்திரப்படுத்தினாள். நேரே ஒரு ஆட்டோவில் அந்தக் கம்பெனிக்குச் சென்றாள்.

உடனே உரியவர்களைப் பார்க்க முடிந்தது. வேண்டிக் கேட்டுக் கொண்டபின், இவள் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவள் எதிரிலேயே மாற்றம் செய்து ஆர்டர் டைப்பாகியது.

வெற்றி வீராங்கனையாக மற்றொரு ஆட்டோ பிடித்து ஷிப்பிங் கார்ப்பரேஷனுக்கு வந்தாள்.

இரண்டொருவர் இண்டர்வ்யூ முடிந்து வெளியேறிக் கொண்டிருந்தனர். படபடப்போடு உள்ளே நுழைந்தவளை மகேஷ் வரவேற்றான். "அவசரமில்லே வித்யா! ஆல்ஃப பெட்டிகல் ஆர்டர்லே 'ஏ, பி முடிஞ்சு.'டி' தான் ஆரம்பிச்சிருக்கு!"

உட்கார்ந்து நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டாள்.

"ஆளைக் காணலியே, வேறெங்காவது வேலை கிடைச்சுட்டதோன்னு சந்தேகப்பட்டேன்." மீண்டும் மகேஷ் கூறினான்.

சிரித்தவாறே "வாருங்களேன் மகேஷ்! கொஞ்ச நேரம் காற்றுடப் போர்டிகோவில் நிற்கலாம்" என்று உரிமையாக அழைத்தாள் வித்யா.

இருவரும் ஓரிடத்தில் நின்றதும், "கைகொடுங்கள் மகேஷ்! உங்களுக்கு அந்தக் கம்பெனி வேலை கிடைச்சுட்டது" என்று மகிழ்ச்சியின் பீறிடலில் தோய்ந்து கூறினாள் வித்யா.

"கம் இட்! விளையாட்டா, வேடிக்கையா" கையை அப்பால் நீட்டினான்.

"நான் சொன்னது முழுக்க முழுக்க உண்மை! என் கண்ணாலேயே உங்கள் ஆர்டரைப் பார்த்தேன். கன்கிராஜுலேஷன்ஸ்!" அவன் கையைத் தன் மென்மையான கையால் பற்றிக் குலுக்கினாள்.

ஆனால் அந்த நேரத்தில் அவளது கைஸ்பரிசத்தை விட அவள் கூறிய செய்தியின் சாராம்சமே அவனைப் புளகமுற வைத்தது.

"எனது வேலை பற்றிக் கேட்கப் போன நான், உங்களுக்கு வேலை கிடைத்த விஷயத்தை அறிந்து சொன்னேன். எனக்கு ட்ரீட் உண்டா மகேஷ்?"

"நிச்சயமாக, அடுத்த ஞாயிற்றுக்கிழமை அடையார் உட்லண்ட்ஸில் உங்களுக்கு ட்ரீட்! அதற்குப் பின் ஐஸ்கிரீம்! நல்ல செய்தி சொன்ன வாய்க்குச் சர்க்கரை போடச் சொல்லுவார்கள், நான் ஐஸ்கிரீம் போட விரும்புகிறேன், ஓ. கே.?"

"ஓ! நல்ல செய்தி சொன்ன வாய்க்கு நாலு கோன் ஐஸ்கிரீமா?" என்று தன் பொன் மொழியை உதிர்த்தாள் அவள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தண்ணீர் தாகமுள்ளவன், ஆற்றுநீர் வண்டலாக இருக்கிறதென்று அதைத் தள்ளி விடுவதில்லை. தெளிந்த ஜலத்துக்காக கிணறு வெட்டத் தொடங்குவதுமில்லை. அதுபோல மத விஷயத்தில் வாஸ்தவமான தாகமுள்ளவனுக்கு வாய்த்த மதம் இந்து மதமாகவோ வேறு எந்த மதமாகவோ இருந்தாலும் அதைப் புறக்கணிப்பதில்லை.; தனக்கென்று புதிதாக ஒரு மதத்தை ஏற்படுத்திக் கொள்வதுமில்லை.

—ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேச மொழிகள் என்ற நூலிலிருந்து

தகவல்: எஸ். முகம்மதுயூசுப்.



ஞாயிற்றுக்கிழமையன்று முன்னதாகவே வித்யாவிற்குக் காத்திருந்த மகேஷ், அவள் வந்து உட்கார்ந்ததும் தனக்கு வந்த ஆர்டரை நீட்டினான். அவன் முகத்தில் சிரிப்பு அளவளாவிக் கொண்டிருந்தது.

"வித்யா! மற்றொரு மகிழ்ச்சிச் செய்தி சொல்லப் போகிறேன்." அவன் முகத்தில் கொஞ்சம் வெட்க ரேகைகள் கலந்து தெளிந்தன.

வித்யாவின் நெஞ்சு படபடத்தது. தன் நெஞ்சருகே, தன் மனக்கதவைத் தட்டத் தான் வருகிறான் என்று புரிந்து கொண்ட நாணத்தில் பார்வையைத் தூர அனுப்பி, செவிகளைக் கூர் தீட்டிக் கொண்டாள்.

"சங்கீதா வேலை பார்க்கும் பெண், நல்ல வேலை. கைநிறையச் சம்பளம். எல்லாம் பொருந்தியும், நான் வேலையில்லாது நின்றதால் திருமணம் பொருந்தாமல் நின்றது. நேற்றுத்தான் நிச்சயதார்த்தம் நடந்தது. ஒரு நல்ல நட்பு நம்மிடையே மலர்ந்ததற்கடையாளமாக, நீங்கள் அவசியம் என் கல்யாணத்திற்கு வர வேண்டும்..." யார் நெஞ்சையோ பிளக்கிறோம், யார் உள்ளத்தையோ எரிமலையாக்கிச் சுக்கல் நூறாக உடைக்கிறோம் என்பதை உணராத மகேஷ் தன் மகிழ்ச்சியை அவளிடம் பங்கிட்டுக் கொண்டான்.

"வித்யா! என்ன யோசனை?"

# N.S.K.

## பைனான்சியர்ஸ்

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில்

ஃபிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

ஒவ்வொரு ரூ. 5000/- [குறைந்தது 5 வருடங்கள்] டெபாசிட்டுக்கும

# அன்பளிப்பு V.I.P ஃபிரீப்கேஸ்

ஒவ்வொரு ரூ.5000/-[குறைந்தது 2 வருடங்கள்] டெபாசிட்டுக்கும்

அன்பளிப்பு – வெள்ளி குத்து விளக்கு

வருடாந்திர வட்டி விகிதங்களின் மேல்

**3%** கூடுதல் வட்டி

இச்சலுகை 1.9.84 முதல் 30.9.84 வரை மட்டுமே. இப்பொன்னான வாய்ப்பை தவற விடாதீர்கள்.




மற்றும் ஒரு பொன்னான வாய்ப்பு :— உடல் ஊனமுற்றோர், பென்ஷனர்ஸ், விதவைகள், மைனர் இவர்களுக்கு மேற்கண்டுள்ள போனஸ் வட்டியையும் தவிர 1% கூடுதல் வட்டி (அதாவது- 25%) அளிக்கப்படுகிறது.

மாதாந்திர வட்டி விகிதங்கள்

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|---|
| 15% | 16% | 17% | 18% | 21% |

(Minimum deposit acceptable Rs. 1000/- multiples)

உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்களது ''கோல்டன் கேஷ் சர்டிபிகேட் திட்டத்தின்'' மூலம் இருமடங்காகிறது.



முதலீடு செய்ய தொடர்புகொள்க:

பதிவு & நிர்வாக அலுவலகம்:

(தி.நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்) எண். 38B, பர்கிட் ரோடு

(முதல் மாடியில்) தி.நகர், சென்னை-600 017. போன் : 447135

எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.

''அதென்ன மகேஷ்! கைநிறைய வேலை பார்க்கும் பெண்ணைத்தான் கட்டவேண்டும் என்று முதலிலேயே தீர்மானித்திருந்தீர்களா?''

''ஆமாம் வித்யா! காலப் போக்கில் சில நியதிகள் மாறுகின்றன அல்லவா? ஒருவர் சம்பாதிப்பதில் வறண்ட வாழ்க்கை தான் நிச்சயம். இருவர் சம்பாத்தியம் தான் வளமான வாழ்க்கைக்கு வழிசோலும். நல்ல பெண், குடும்ப நிர்வாகம் தெரிந்தவள், மனுஷாளை ஆதரிக்கிறவள்னு புகழப்படுற பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கறது பணக்காரர்களுக்குச் சரியா இருக்கலாம். நல்ல பொருளாதார நிலைக்கு உயர வேண்டும் என்பது இன்றைய போராட்டம். எனவே படித்து வேலை பார்க்கும் பெண்ணே இன்றைய பிரச்சினைக்கு ஏற்றவள். குணங்களற்று, எளிமையும் — பூனையுமாக வாழும் கணவன் — மனைவி கூட, இருவரும் வேலைக்குச் செல்வதால் பல சௌகரியங்களை அனுபவிக்க முடிகிறது. அந்த மாதிரி நிறைவைத் தேடித்தான் சங்கீதாவைத் தேர்ந்தெடுத்தேன்... ஆம் ஐ கரெக்ட் வித்யா?''

''வெரி வெரி கரெக்ட்... கன்கிராஜுலேஷன்ஸ்!'' மனக்குமுறலை அடக்கியவாறே கூறினாள் அவள்.

**வே**லையில் சேர்ந்த அன்றே திருமண அழைப்பிதழ் தரும் மகேஷை வேடிக்கையாகப் பார்த்தார்கள், அந்த அலுவலக ஊழியர்கள்.

''ஓ... ஓ... இந்த வேலை கிடைச்ச உடனே தீர்மானிக்கப்பட்ட திடீர் கல்யாணம் இது.''

மானேஜரிடம் சென்று அழைப்பிதழைத் தந்து விட்டு நன்றி கூறினான் மகேஷ்.

''உம்! குடுத்து வச்சவன்ப்பா! எப்பேர்ப்பட்ட பெண் இது. தனக்குக் கிடைத்த வேலையை உனக்குத் தரச் சொல்லி எவ்வளவு நேரம் வாதாடினாள் தெரியுமா? தனக்குத் தர்றதை விட தனக்குக் கணவனாக வரப் போகிறவனுக்கு இந்த வேலை கிடைச்சா 'டபிள் பெனிபிட்' இருக்கு ஸார்னு கேட்டு உனக்கு வாங்கித் தந்துட்டாளே... பேஷ், பேஷ்! உடனே கல்யாணம் வச்சுக்கிட்டியே, நல்லது... அவள் விரும்பிய வாழ்க்கை அவளுக்குக் கிடைச்சுட்டதே...''

மகேஷ் குழம்பினான். ''ஸார்! தனக்குவந்தவேலையைஎனக்குத் தந்தது?...''

''ஹர் குட் நேம் ஈஸ் வித்யா! யெஸ், வித்யாதான் உனக்கு இந்த வேலையை விட்டுக் கொடுத்தது.''

தலையில் பூச்சிகள் பறப்பது போல் உணர்ந்தான்.

எல்லாம் ஒரு கண நேரம்தான்.

''புவர் கேர்ள்! நீ இந்த வேலையை எனக்கு விட்டுக் கொடுத்தாயா? எவ்வளவு முட்டாள்தனம் அது! நான் என்ன செய்யட்டும்? நானா உன் வேலையைத் தரும்படி கேட்டேன்...'' என்று தனக்குள் முணுமுணுத்தவாறே அவளைப் பற்றிய நினைவுகளை மிக எளிதாகத் தூரத் தள்ளிவிட்டான் மகேஷ்!

# வட்டமேஜை

● ''பேஷ்!'', ''பலே!'', ''ஜோர்!'', ''அமர்க்களம்!'' 'என்று எப்படிப் புகழ்ந்தாலும் போதாது, தங்களுடைய இந்தவார தலையங்கத்தை. ஆம், ''அன்னையைக் கேட்காதீர்கள்; அவர் அப்பாவி!'' என்ற தலையங்கத்தைத் தான் சொல்லுகிறேன். அமரர் கல்கி அவர்களே, இத்தலையங்கத்தைத் தங்கள் கனவில் வந்து சொன்னாரா என்றல்லவா நினைக்கத் தோன்றுகிறது. அதில் உள்ள நகைச்சுவையைப் பார்க்கும்போது!
சென்னை—17. நாடோடி.

● ஆந்திர எம். எல். ஏக்கள் குடியிருக்கும் கர்நாடகத்திற்குச் சென்று, அவர்களிருக்கும் இருப்பிடத்தைத் தேடி, பல இன்னல்களுக்கிடையில் அவர்களைச் சந்தித்துக் கருத்துக்களையும் புகைப்படங்களையும் வாங்கிப் பிரசுரித்திருந்த விதம் மிகவும் வித்தியாசமாக இருந்தது.
சென்னை—5. எஸ். வி. ராஜசேகர்.

● திரு. டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், அவர்களுக்கு அஞ்சலி செலுத்திய விதம் என் மனத்தைத் தொட்டது.
கவுந்தப்பாடி. அன்புதாசன்.

● 'அனைவர் ரத்தமும் ஒரே நிறம்! அன்பிற்கு முன் அனைவரும் சமம்! ஜாதிகள் நாமே வகுத்துக் கொண்டவை!' — இவற்றை நன்கு பிரதிபலித்த 'ஜோதியில் வித்தியாசம் இல்லை' போட்டிக்கதை சிறப்பாக இருந்தது.
திண்டுக்கல். எஸ். பி. தியாகராஜன்.

● சிறப்புக் கட்டுரையாக வெளியிடப்பட்டிருந்த ''அநீதிக்குத் தலைவணங்காதவர்'' எனும் கட்டுரை அற்புதமாக இருந்தது.
பெங்களூர்—21. ப. மூர்த்தி.

● ''குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில் அமைதி இன்றிப் பற்பல நினைவுகளுடன் மனத்தை அலைபாய விட்டு மனநிம்மதி இழந்து தனியாய்த் தவிக்கிறான் என்பதை நா. பார்த்தசாரதியின் சித்திரிப்பு நிஜமான ஒன்று.
பீரூர் வெளிக்கடை டி. ராஜன்.

● அமைச்சர் ஆசிரியராய், மாணவனாய் இருந்த போது நடந்தவற்றைக் கவைபட, கூறியிருந்தார். இதில் இன்றைய ஆசிரியர்கள் கற்றுக் கொள்ள வேண்டியவை இருந்தன.
அது சரி. நல்லாசிரியர் விருது வழங்கப்படுவது போல் நல் மாணவன் விருதும் கொடுத்தால் சிறப்பாக இருக்கும்.
சென்னை—84. பொடுசி.

● இந்த உமாபதி சரியான எமகாதகராக இருக்கிறாரே! பஸ் கட்டண உயர்வு பற்றிய கார்ட்டூனைப் பார்த்து அழுவதா, சிரிப்பதா? தெரியவில்லையே!
வடுவூர். எஸ். கண்ணன்.

# விஷப் பரீட்சை வேண்டாமே!

● பற்பசை, பற்பொடி இவைகளில் ஃப்ளோரைட் கலந்திருக்க வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்படுகிறது. ஃப்ளோரைட் பல் பாதுகாப்புக்கு அவசியமானது என்பதால் குடிதண்ணீரிலும் 1 P.P.M. அளவு (ஒரு மில்லியன் துளிகளுக்கு ஒரு துளி.) ஃப்ளோரைட் கலக்க வேண்டுமென்கின்றனர். ஆனால் ஃப்ளோரைட் 3 P.P.M. அளவுக்கு மேல் போனால் அந்தத் தண்ணீரை உட்கொள்ளும் மக்களுக்குக் குணம் செய்ய முடியாத முடக்கு வாதம் என்ற நோய் ஏற்படும் என்றும் தெரிய வந்துள்ளது.
நமது தண்ணீர் சுத்திகரிப்பு இலாக்காக்களின் லட்சணத்தை இவர்கள் குளோரின் கலக்கும் விதத்திலேயே நாம் நன்கு அறிவோம். 1 P.P.M. அளவுக்கதிகமாகப் ஃப்ளோரைடை இவர்கள் செயற்கையான முறையில் குடிநீரில் கலந்து விடுவார்களேயானால் நமது மக்கள் மெல்லக் கொல்லும் வியாதிக்கு உள்ளாவது நிச்சயம். தவிர, பற்பொடி, பற்பசை இவைகளின் இத்திப்பு, குசிகாரணமாகச் சிறுகுழந்தைகள் ஒவ்வொரு நாள் பல் துலக்கும் போதும் சிறிதளவு சாப்பிட்டு விடும் வழக்கமுடையன. ஆக இந்த ஃப்ளோரைட் விவகாரம் ஒரு விஷப் பரீட்சையே.
சென்னை—102. எஸ். அனந்தராமன்.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)



தெய்வ தரிசனம்

# ஆலாலமுண்டு பள்ளிகொண்டார்!

நாகலாபுரம், கைலாஸநாத் கோணை முதலிய தலங்களைத் தரிசிக்கலாம் என்று போன போது கிடைத்த 'போனஸ்' பள்ளி கொண்டேசுவரர் தரிசனம். வண்டி வேகமாகப் போகும் போது 'ஸர்வ பள்ளி' என்று படித்து விட்டு முதலில் 'இதுவா டாக்டர் ராதாகிருஷ்ணன் பிறந்த ஊர்?' என்று மனத்தில் நினைத்துக் கொண்டேன். திடீரென்று ஞாபகம் வந்தது. ஆந்திராவின் எல்லையில் இருக்கும் சுருட்டப்பள்ளி ஒரு அபூர்வமான தலம் என்பதும், ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் இந்தக் கோவிலைப் பற்றி மிக வும் சிலாகித்துப் பேசியிருக்கிறார்கள் என் பதும். பிறகு என்ன? தரிசனம் செய்யாமல் போய் விடுவோமா?

மாலைநேரம். கையில் எந்தப் பூஜைப் பொருளும் இல்லை. அங்கு பக்கத்தில் கடை கண்ணியையும் காணவில்லை. 'ஈசனுக்குத் தெரியாதா நம் மனசு?' என்று நினைத்துக் கொண்டு அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை இடுதிரியா என்ற வார்த்தைகளை உருப்போட்டுக் கொண்டே கோவிலை அடைந்தோம். மூன்றும் கோவில் திறக்கவில்லை. குருக்கள் வீடு உள்ளேயே இருக்கிறதென்று யாரோ சொன்னார்கள். உள்ளே சென்று கேட்ட போது குருக்கள் இல்லை. 'அவர் பேரன் தான் இருக்கிறான்; கோவிலைத் திறந்து தரிசனம் பண்ணி வைப்பான்' என்று சொன்னார்கள்.

கதவு திறந்ததும் உள்ளே காஞ்சிப்பெரியவர்களுடைய அன்பு ததும்பும் வதனத்தைத் தரிசனம் செய்கிறோம். அதனாலேயே ஒரு சுவாரஸ்யம் பிறக்கிறது.

''முதல்லே சுவாமி, அம்பாளைத் தரிசனம் பண்ணலாம் வாங்கோ'' என்று கூப்பிடுகிறார் வேங்கடராமன். பதினைந்து வயதுக்குள்தான் இருக்கும் என்றாலும் சுவாமி சந்நிதியில் தீபாராதனை செய்து விபூதி

× பள்ளிகொண்டேசுவரர்



அளிக்கும் இளைய குருக்களை மரியாதையாகத் தானே குறிப்பிட வேண்டும்?

சுவாமி வால்மீகேசுவரர். வால்மீகி மகரிஷியின் பக்தியில் மனம் மகிழ்ந்து ஈசுவரன் இந்த இடத்தில் மரகதாம்பிகையுடன் தரிசனம் அளித்தாராம். ஸ்ரீராமனைப் பாடியே சிவபெருமானின் அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமாகி விட்ட தவ முனிவரல்லவா?

அன்னை மரகதாம்பிகையின் சந்நிதியில் தீபாராதனை செய்து குங்குமம் வழங்கினார் வேங்கடராமன். இந்தக் கோவிலின் தனிச் சிறப்புகளையும், காமகோடி பெரியவர்கள் இந்தப் பக்கம் யாத்திரை செய்தபோது இங்கு சில நாட்கள் தங்கியிருந்து இந்தத் தலத்தின் சிறப்பை நாடறியச் செய்ததையும் எடுத்துக் கூறி வந்தார். சந்நிதிக்கு முன்னால் உள்ள சாளக்கிராம விநாயகரைத் தரிசனம் செய்வித்துக் கொஞ்சம் கொஞ்சமாக விநாயகர் உருவம் இதில் தானாகவே உண்டாகி வருகிறது'' என்றார்.

பிராகாரத்தில் வலம் வரும்போது இன்னும் சில தேவ ரகசியங்களைச் சிற்ப வடிவ அமைப்பில் காண்கிறோம். ஏக பாத திரிமூர்த்தியின் சிலை நம் கண்களை ஈர்க்கிறது. பூர்ண புஷ்கலாவோடு சாஸ்தா, பின்னர் நீண்ட தாடியுடன் வால்மீகி முனிவர். கோஷ்டத்தில் நின்ற நிலையில் ராஜராஜேசுவரியைப் பார்த்து வியக்கிறோம்.

''கோஷ்டத்தில் கணபதியைப் பார்த்தீர்களா? பிரும்மாவைப் பாருங்கள். அஞ்சலி ஹஸ்தத்தோடு பிரணவப்பொருள் தெரியாததற்காக மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறார்.''

கருவறைகள் நெருக்கமாக இருக்கின்றன. இடையில் அழைத்துச் சென்று 'இதோ பாருங்கள்! தாம்பத்ய தக்ஷிணாமூர்த்தி. யோகாசனத்தில் ரிஷபாரூடராய், அம்பாளுடன் இருக்கிறார். இங்கே பதஞ்சலி வியாக்ரபாத முனிவர்களுக்கு உபதேசம் செய்கிறார்.'' வேங்கடராமன் ஸர்வ நிச்சயமாகச் சொல்வது திருப்தியாக இருக்கிறது. சக்தியோடு சேர்ந்து நமக்கு ஞானத்தை உபதேசிக்கும் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியிடம் தனியானதொரு ஈடுபாடு உண்டாகிறது.

பின் கோஷ்டத்தில் ஜுரஹரதேவர் என்ற மூன்று பாத மூர்த்தி, கரத்தில் கபாலமேந்தியிருக்கும் மகாவிஷ்ணு, தெற்கு நோக்கியுள்ள முருகப் பெருமான், எல்லோரையும் வியப்பு மேலிடத் தரிசனம் செய்து கொண்டே வருகிறோம்.

சரஸ்வதி தேவியின் அபூர்வமான வடிவத்தைக் கண்டு சொக்கி நிற்கிறோம். பிருகு மகரிஷியும் பிரும்மதேவரும் இங்கு யாகம் செய்ய அரணிக் கட்டையைக்

கடைந்த போது அதில் உற்பத்தியாகி ஊற்றாகிப் பெருகினாள் விருசியாமளா. இந்தக் கோவிலுக்குத் தெற்கில் வற்றாமல் ஓடுகின்ற அருணாநதி இந்தச் சியாமளையின் பீடத்துக்கடியில் ஓடுகிறது என்றும் சில சமயம் நீர் ஓடும் ஒலி கேட்குமென்றும் கூறுகிறார் வேங்கடராமன்.

கோஷ்டத்திலுள்ள இன்னொரு புதுமையான கலைச் செல்வம் விஷ்ணு துர்க்கை. வலது கையில் கிளியை ஏந்தி ஒரு ஹஸ்தத்துடன் சாந்தம் தவழும் புன்னகையோடு தெள்ளத் தெளிந்த ஞான வடிவினளாய், கலை பொருந்திய வடிவினளாய்ப் பீடத்தில் நின்று காட்சி தருகிறாள்.

மாலை வேளையானதால் மூர்த்தியைத் தரிசிக்க ஆசைப்படுகிறோம். சந்நிதி பூட்டியிருக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் அன்னை சிவகாமியின் விக்ரகம் காணாமல் போய் விட்டதாம். பகீரென்கிறது. இதற்குக் காரணமாக இருந்தவர்களை மனம் சபிக்கிறது. உடனே கோவிலில் நின்று கொண்டு வேண்டாத எண்ணங்களுக்கு மனத்தில் இடங்கொடுக்கக் கூடாது என்று துயரத்தை அடக்கிக் கொண்டு அடுத்திருக்கும் கோவிலை அடைகிறோம். இன்னும் பள்ளி கொண்டேசுவரரைத் தரிசிக்கவில்லையே!

பெருமாளைப் போலப் பள்ளிகொண்டிருக்கும் சிவபெருமானை விளக்குகளின் சுடரில் முதலில் தரிசனம் செய்கிறோம். எங்கிருந்தோ ஒளி பரவுகிறது. நான்கு புறமும் தேவ முனி கணங்கள் ஈசுவரனுடைய தரிசனத்துக்கு வந்திருப்பதைப் பார்க்கிறோம்.

ஸர்வ மங்களா தேவியின் மடியில் தலை சாய்த்துப் படுத்திருக்கிறார் சிவபெருமான். 'ஏன் பள்ளி கொண்டீரையா?' என்றுகேள்வி எழுகிறது உள்ளத்தில்.

அதைப் புரிந்து கொண்ட மாதிரி வேங்கடராமன் கூறுகிறார்: ''இந்த ஊரில்தான் பிரதோஷமே ஏற்பட்டது. அதனால் பிரதோஷ காலம் ரொம்ப விசேஷம்.''

அமிர்தத்துக்காகத் தேவர்கள் பாற்கடலைக் கடைந்த போது ஆலகால விஷமும் உண்டாயிற்று. அந்த விஷத்தின் கொடுமை தாங்க முடியாமல் தேவாசுரர்கள் அத்தனை பேரும் சிவபெருமானிடம் சரணாகதி அடைந்தார்கள். அந்த விஷத்தை ஒரு குளிகை மாதிரி எடுத்து உண்டு லோகங்களைக் காத்து நீலகண்டரானார் பரமேசுவரன்.

''கோலாலமாகிக் குரைகடல்வாய்
அன்றெழுந்த
ஆலால முண்டா னவன் சதுர்தான்
என்னேடீ
ஆலால முண்டிலனேல் அன்றையன்மா
லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண்
சாழலோ.''

என்ற திருச்சாழல் நினைவுக்கு வருகிறது 'அடாடா! ஈசனுக்குத் தான் என்ன சாமர்த்தியம்!' என்று மாணிக்கவாசகருடன் நாமும் சேர்ந்து வியக்கிறோம்.

வேங்கடராமன் தொடர்ந்தார்: ''விஷத்தை உண்டு மயங்கிய மாதிரி பகவான் நடித்தார். அம்பாள் மடியில் தலை வைத்துக் கொண்டு சயனம் பண்ணினார். சுவாமி கண்களை மூடியதும் உலகமே இருட்டி விட்டது. தேவர்கள் ஈசனைத் தேடினார்கள். நாரத முனிவர் கால கூடாசன க்ஷேத்திரத்தில் ஈசுவரன் பள்ளி கொண்டிருப்பதையும், ஸர்வமங்களாதேவி உடனிருப்பதையும் கூறினார். உடனே ஸகல தேவர்களும், முனிவர்களும் இந்த இடத்துக்கு வந்து பகவானுக்கு எல்லா உபசாரங்களும் செய்தார்கள்.''

ஸர்வமங்களா தேவியின் மகத்தான பாக்கியம் ஆலகால விஷம் கூட சக்தியற்றுப் போயிற்று. அம்பிகையைச் சரண் புகுந்தால், ஸர்வ மங்களையான தேவியைத் துதித்தால் மன மாசுகள் எல்லாமே சக்தி இழந்து போகும். மங்கள மயமாகி விடும் என்று கூறாமல் அறிவிக்கின்றது ஸர்வ மங்களையின் கோலம்.

பள்ளி கொண்டேசுவரருக்கு அபிஷேகம் கிடையாது. தைலக் காப்புத்தான் சாத்துகிறார்கள். சிவராத்திரி ரொம்ப விசேஷமான தினம்.

கருநிற வண்ணனாக ஸ்ரீரங்கநாதனைப் போலவே ஈசனை இங்கு காண்கிறோம். தேவி இளம் பசுமை நிறமாகவும் மற்ற தேவர்கள் ரிஷி கணங்கள் பலப்பல வண்ணங்களிலும் காணப்படுகிறார்கள். இதோ குபேரன் வெண் சாமரம் வீசுகிறான். இந்திரன், சூரியன், சந்திரன், கந்தருவர், கின்னரர்கள், மகரிஷிகளான அகஸ்தியர், புலஸ்தியர், கௌதமர், தும்புரு, வசிஷ்டர், விசுவாமித்திரர், வால்மீகி, பிருகு, மார்க்கண்டேயர், நாரதர் முதலியோரும், ஸ்ரீமந்நாராயண மூர்த்தியும் ஈசுவரனை ஆசுவாசம் செய்யக் கூடியிருக்கிறார்கள். இந்த ஒரு கோவிலை வலம் வந்தால் போதும். வேறு தலங்களுக்குப் போகவே வேண்டாம். அத்தனை தேவர்களும், ரிஷிகளும் கருவறையிலேயே பரமேசுவரனுடன் கூடி இருக்கிறார்கள். திருக்கைலாயம் இதுதான்.

கோவில் சுத்தமாக இருப்பதைக்கண்டு மனமகிழ்கிறோம். ஆனால் கருவறையில் சுவரொட்டி போல் அத்தனை பெயர்களையும் எழுத வேண்டுமா? அழகாக இல்லையே?

பள்ளி கொண்டேசுவரருடைய திருப்பாதங்களில் அர்ச்சனை செய்து தீபாராதனை செய்கிறார், வேங்கடராமன். பிறகு சடாரி சாதிக்கிறார். ''இதென்ன, சிவன் கோவிலில் சடாரி?'' என்று கேட்டதற்கு, ''இங்கே சடாரி சாதித்துத் தீர்த்தம் கொடுக்கும் வழக்கம் உண்டு. சுவாமிக்குப் புரோக்ஷணம் செய்த தீர்த்தம் சடாரியின் திருவடிகளுக்கு அபிஷேகம் ஆவதால் அதைத் தலையில் தரித்துக் கொள்ளும் வழக்கம் இருக்கிறது'' என்று வேங்கடராமன் விளக்கம் சொன்னார்.

ஸர்வ மங்கள மாங்கல்யே!
சிவே ஸர்வார்த்த ஸாதகே!
சரண்யே த்ரியம்பகே தேவி
நாராயணி நமோஸ்துதே!

# ஸ்ரீ தேவியின் பேரருளைப் பெற நவராத்திரியில்

| நாள் | ஒன்பது பொருள்களைக் கொண்டு | ஒன்பது வித மா கோலங்கள் போட வேண்டும். | சுமங்கலிகளுக்கும் கன்னி பெண்களுக்கும் நீராடக் கொடுக்க வேண்டும். | | சக்தியுள்ளவர்கள் பெண்களை வீட்டுக்கு அழைத்து நவரத்தினம் கொடுக்கலாம். | வசதியற்றவர்கள் இவைகளைக் கொடுக்கலாம். |
|---|---|---|---|---|---|---|
| 1 | அரிசிமா | பொட்டு | பச்சிலை | எண்ணெய் | பொன் | சோழி |
| 2 | கோதுமைமா | கட்டம் | பூலாங்கிழங்கு | மஞ்சள் | வெள்ளி | குன்றிமணி |
| 3 | முத்து | மலர் | சண்பக மொட்டு | குங்குமம் | முத்து | தட்டைப் பவளம் |
| 4 | அட்சதை | படிக்கட்டு | கஸ்தூரி மஞ்சள் | பன்னீர் | பவளம் | கிளிஞ்சல் |
| 5 | கடலை | பறவையினம் | திரவியப்பட்டை | சந்தனம் | வைடூரியம் | செப்பு |
| 6 | பருப்பு | தேவிநாமம் | காசுக்கட்டி | வாசனைத் தைலம் | கோமேதகம் | பதுமை |
| 7 | மலர் | இட்டாணி | லாக்ஷாரஸம் | நலங்கு மஞ்சள் | புஷ்பராகம் | அம்மானை |
| 8 | காசு | பத்மம் | கஸ்தூரிகா பத்ரம் | மருதோன்றி | மரகதம் | பந்து |
| 9 | கற்பூரம் | ஆயுதம் | கோரோஜனம் | புஷ்பநீர் | வைரம் | கழற்சிக்காய் |

**இவைகளை செய்ய முடியாதவர்கள் கீழ்க்கண்ட எமது இனிப்பு கார வகைகளை** வாங்கி விநியோகிக்கவும்.

**இனிப்பு :** பாதாம் அல்வா, கோதுமை அல்வா, பால் அல்வா, முந்திரி கதலி, பாதம் கத்தரி, ஜாங்கிரி, லட்டு, மைசூர்பாகு, சாக்லட் கேக், சோன் பப்டி, பாதுஷா, குலாப்ஜாமூன், ரஸமலாய், கர்ஜிக்காய் பேடா, பருப்பு போளி, தேங்காய் போளி, சம்சம் சம்பாக்களி, கோவா சேன்டிவிச் முதலியன.

**காரம் :** தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, மிக்ஸர், சமோசா, சீடை முதலியன.

# செய்ய வேண்டிய சில அனுஷ்டானங்கள்

| வீடு தேடி வரும் குமரிகளுக்கும், சுமங்கலி களுக்கும், பக்தியுடன் தன் கையால் பொட்டு இடலாம். | இளசரி காலை, மாலை மேற்கண்ட ராகங்களில் ஸ்ரீ தேவி சம்பந்தமாக பாடலாம். | மேற்கண்ட வாத்தியம் பின்னணிகளுடன் பாட லாம். | மேற்கண்ட மலர்களைக் கொண்டு மாலை அணிவிக்க லாம். | மேற்கண்ட தழைகளைக் கட்டு மாலைகளாகக் கட்டி சார்த்தலாம். | பெண் குழந்தைகளுக்கு ஒவ்வொருநாளும் நிவேதி மாகக் கொடுக்கலாம். | பாலா என்னும் பருவச் சிறுமியின் மகிழ்ச்சிக்காக | மேற்கண்ட பிரசாதங்களை விநியோகிக்கலாம். |
|---|---|---|---|---|---|---|---|
| புனுகு | தோடி | மிருதங்கம் | மல்லிகை | வில்வம் | வாழை | சுண்டல் | வெண்பொங்கல் |
| ஜவ்வாது | கல்யாணி | புல்லாங்குழல் | முல்லை | துளசி | மா | வறுவல் | புளியோதரை |
| கஸ்தூரி | காம்போதி | வீணை | சம்பங்கி | மரு | பலா | துவையல் | சர்க்கரைப் பொங்கல் |
| அரகஜா | பைரவி | கொட்டு வாத்தியம் | ஜாதி | கதிர்ப்பச்சை | கொய்யா | பொரியல் | கதம்பம் |
| சந்தானம் | பந்துவராளி | ஜல்லரி | பாரிஜாதம் | விபூதிப்பச்சை | மாதுளை | அப்பளம் | ததியோதனம் |
| குங்குமம் | நீலாம்பரி | பேரி | செம்பருத்தி | சந்தனஇலை | நாரத்தை | வடகம் | தேங்காய்சாதம் |
| சாந்து | பிலஹரி | படகம் | தாழம்பூ | தும்பைஇலை | பேரிச்சை | சூரணம் | எலுமிச்சம் பழம் சாதம் |
| ஸ்ரீசூர்ணம் | புன்னாக வராளி | கும்மி | ரோஜா | பன்னீர் இலை | திராட்சை | முறுக்கு | பாய சான்னம் |
| மை | வஸந்தா | கோலாட்டம் | தாமரை | மருக் கொழுந்து | நாவல் | திரட்டுப்பால் | அக்காரஅடிசில் |

**திருமண வைபவங்களுக்கு:** சீர் அதிரசம், சீர் முறுக்கு, பருப்புத் தேங்காய், கட்டிப்பருப்பு, திரட்டுப் பால், முள்ளு தேன்குழல் முதலியன.



# விபரீத கரணி

பயப்படுகிற மாதிரி ஒரு பெயர். அவ்வளவுதான். தலைகீழ் நிலை என்று பொருள். இந்த யோகாசனம் ஆஸ்துமா நோயுள்ளவர்களுக்கு நல்ல குணம் தருகிறது.

தனியார் நிறுவனம் ஒன்றில் பணியாற்றுகிறவர் மிஸ்டர் எக்ஸ். பெங்களூர்வாசி. பதவி உயர்வால் சென்னைக்கு வந்து சேர்ந்தார். பத்து ஆண்டுகளாக ஒரே தொல்லை. ஆஸ்துமா வந்துவிட்டது. பருவ நிலை, இடமாற்றம், ஒரு காரணம். அவர் பணியாற்றிய நிறுவனத்தின் தூசுப் பிரச்சினை ஒரு முக்கியமான காரணம். அலோபதி ஹோமியோபதி எல்லா வைத்திய முறைகளிலும் நிரந்தரமான பலன் கிடைக்கவில்லை.

ஓர் அலோபதி டாக்டரே ஆலோசனை சொன்னதன் பேரில் யோகாசனப் பயிற்சியில் ஈடுபட்டார்.

ஆஸ்துமா நோய் இருந்த இடம் தெரியவில்லை. ஒரு வருஷமாகப் பரம நிம்மதி. பச்சைத் தண்ணீர்க் குளியல், ஐஸ் வாட்டர் சாப்பிடுவது, தக்காளி போன்ற காய்கறிகள் சேர்ப்பது என்று எதுவும் தள்ளுபடியில்லை. அவர் சொன்னது, ''நோயால் அவதிப்பட்டபோது ஆண்டொன்றுக்கு மூவாயிரம் ரூபாய் முதல் நாலாயிரம் ரூபாய் வரை மருந்துக்காக மட்டும் செலவாயிற்று. யோகா பழகியதும் படிப்படியாக இந்தச் செலவு குறைந்தது. இப்போது நோயும் இல்லை, மருந்துச் செலவும் அறவே இல்லை...''

விபரீதகரணி பற்றி இந்த வாரம் விளக்கம் தருகிறவர் யோகா பிரதர்ஹுட் அமைப்பின் பயிற்சியாளர்களில் ஒருவரான திரு. ஏ. அசோக்குமார்

இது சிரசாசனத்துக்கு இணையான பலன்களைத் தருகிற, ஆனால் அவ்வளவு சிரமம் இல்லாத ஒரு ஆசனம். குறைந்த பட்சம் முப்பது வினாடிகளிலிருந்து தொடர்ந்த நீண்ட காலப் பயிற்சிக்குப் பின் அரைமணி நேரம் வரை கூடச் செய்யலாம்.

பன்னிரண்டு வயதுக்கு உட்பட்டவர்கள் முப்பது வினாடி. ஒரு நிமிடம் மேல் செய்ய வேண்டியதில்லை. செய்யவும் கூடாது.

எல்லாச் சுரப்பிகளும் செம்மையாக இயங்குவதற்கு விபரீதகரணி துணை புரியும். 'நரை – திரை' இரண்டும் அண்டவிடாமல் செய்யும் இது. (நரை என்றால் தெரியும். திரை என்றால் என்ன தெரியுமா கண்களில் வயதானால் காடராக்ட் மறைப்பு ஏற்படுகிறதே அதுதான், 'திரை')

பெண்களும், குறிப்பாக மாதவிலக்கு, பிரச்சினைகளை உடையவர்கள் இந்த ஆசனப் பயிற்சியால் பயன் பெறலாம். சைனஸ் தொல்லை, முதுகில் பிடிப்பு, தோள் பட்டைகளில் வலி – இவற்றிலிருந்து விடுபடவும் இது உதவும். அடிக்கடி ஜலதோஷம் பிடிக்கிறதே... என்று தவிக்கிறவர்களுக்கு விபரீதகரணி நிச்சயம் உதவும்.

ஸிஸேரியன், போன்று வயிற்றுப் பகுதியில் சர்ஜரி செய்து கொண்டவர்கள் கூட டாக்டர்களின் ஆலோசனையுடன் இந்த ஆசனப் பயிற்சியை மேற்கொள்ளலாம்.

**பயிற்சி முறை:**

தரை விரிப்பின் மீது கால்களை நன்கு நீட்டி, மல்லாந்து படுக்கவேண்டும். தரையின் மீது முதுகுத் தண்டு நன்றாகப்படிய வேண்டும். உள்ளங்கைகள் தரையைநோக்கி இருக்கும்படி, கைகளை உடம்போடு ஒட்டி வைத்துக் கொள்ள வேண்டும். கால்கள் சேர்ந்து இருக்க வேண்டும். அப்படியே



அவர்: ''நேத்து என் கனவிலே இந்திராகாந்தி வந்தாங்க!''

இவர்: ''அப்புறம் நீங்க என்ன செஞ்சீங்க?''

அவர்: ''கட்டில் கவிழ்ந்திடாம இருக்கணுமேன்னு கெட்டியாப் பிடிச்சுக்கிட்டேன்!''

—வாணிபாலன்.



சேர்ந்த கால்களை இடுப்போடு தூக்கி உயர்த்தித் தலைக்கு மேல் தரைமட்டத்துக்கு இணையாக நீட்ட வேண்டும். உள்ளங்கைகள் தரையோடு அழுந்தியே இருக்க வேண்டும். இப்போது இடுப்பை மேலே உயர்த்தி, இரண்டு கைகளாலும் தாங்கிப் பிடித்துக் கொண்டு மெல்லக் கால்களைச் செங்குத்தாக உயர்த்த வேண்டும். இந்த நிலையில் இடுப்புக்கு மேலேயுள்ள உடம்பு 40 அல்லது 45 டிகிரி கோணத்திலும், கால்கள் 90டிகிரி கோணத்திலும் இருக்க வேண்டும். தலை, தரையோடு ஒட்டித்தான் இருக்கும். இந்த நிலையில் முதலில் பத்து எண்ணும் வரை இருக்கலாம். அப்புறம் ஐந்து ஐந்தாகக் கூட்டி, ஒரு மாதம் படிப்படியான பயிற்சியில் அரை மணி நேரம் வரை சுலபமாகக் கொண்டு வந்து விடலாம்.

சமநிலைக்குத் திரும்புவது தான் மிக முக்கியமானது. சடாரென்று கைகளைவிட்டு விட்டு உடம்பைத் தரையில் போடுவது ஆபத்தானது. முதுகெலும்புத் தொடரின் முப்பத்திரண்டு கண்ணிகளும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தரையில் படுகிற மாதிரி மிக மெதுவாக உடம்பைத் தரையில் படிய வைக்க வேண்டும். அப்புறம் கைகளைநீட்டி, கால்களை நீட்டிச் சமநிலைக்கு வரலாம்.

விபரீதகரணி செய்து முடித்தவுடன் சவாசனம் கண்டிப்பாகச் செய்ய வேண்டும். அரைமணி விபரீத கரணியில் இருந்தால், பத்து நிமிஷமாவது சவாஸனத்தில் இருந்தாக வேண்டும். அரை நிமிடப் பயிற்சிக்கு, இரண்டு நிமிடம் சவாசனம் நல்லது.

பேட்டி, கட்டுரை: ஸுப்ர. பாலன்

படத்தில் விபரீதகரணி செய்பவர்: ஜி. ஆர். ஜெயஸ்ரீ

புகைப்படம்: தாமு

குறிப்பு:

புத்தகங்களைப் படித்து யோகம் பயிலுவதை விட, முறையாக யோகப் பயிற்சி தரும் ஆசிரியர்களிடம் கற்றுக் கொள்வதே சிறந்தது என்பதை இக்கட்டுரைத் தொடரில் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வருகிறோம்.

எனவே இந்தத் தொடரைப் படித்து வரும் அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள். தங்கள் ஊரில் உள்ள யோகப் பயிற்சி நிலையங்களைப் பற்றிய முகவரி விவரங்களை ஓர் அஞ்சல் அட்டையில் குறித்து 'ஆசிரியர் கல்கி, சென்னை—600 032' என்னும் முகவரிக்கு உடனே அனுப்ப வேண்டுகிறோம்.

யோகப் பயிற்சி நிலையத்தின் பெயர், விலாசம், ஆசிரியர் பெயர், இலவசப் பயிற்சியா, கட்டணம் உண்டா — இந்த விவரங்கள் மட்டும் போதுமானவை.

வாசகர்களின் வசதிக்காக இயன்ற அளவில் இந்த விவரங்கள் கல்கியில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி.



அட்டையில் காட்சி அளிக்கும் சத்யா சென்னை சர்ச் பார்க் பள்ளியில் பத்தாம் வகுப்பு படிக்கிறார்.

நான்கு வருடமாக பத்மா சுப்பிரமணியமிடம் பரத நாட்டியம் பயின்று வரும் இவர், இளம்பெண்கள் இந்நாளில் அவசியம் தெரிந்து வைத்திருக்க வேண்டிய கராத்தேயையும் கற்றுவருகிறாராம்.

படிப்பிலும் கட்டியான சத்யா, வீணையையும் விட்டு வேலைகளையும் விட்டு வைக்கவில்லை. கூடவே மூன்று நாய்களைப் பிரியமாக வளர்த்து வருகிறார்.

''எப்படி எல்லாவற்றிற்கும் நேரம் கிடைக்கிறது'' என்று கேட்டால், புன்னகையைப் பதிலாகத் தருகிறார்.

ஏ. எஸ். திவாகர்

வண்ணப்படம்: ஏ.வி. பாஸ்கர்




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)

# ஒரு எம்.எல்.ஏ.யின் விலை என்ன?

நீங்கள் கேட்டவை தராசு

○ தர்மாதிபதி. எஸ், சென்னை–20.

? ரேஸ் கோர்ஸ் ரோடில் இருக்கும் நீங்கள் ரேஸ் பார்த்ததுண்டா? ரேஸில் பணம் கட்டி விளையாடிய அனுபவம் உண்டா? •

காரியாலயத்தில் மாடியில் என்னுடைய அறையிலிருந்து பார்த்தால் ரேஸ் குதிரைகள் ஓடுகிற அருமையான வியூ! பளபளவென்று உடல் ஜொலிக்க அலைஅலையாகத் தசை நார்கள் விம்மி அடங்க குதிரைகள் கம்பீரமாய்ப் பாய்ந்தோடிப் போவது ஓர் அலாதி அழகு. அதை ரசிக்கும் போதே ரேஸ் கோர்ஸுக்குள் நுழைய வசதியற்ற நண்டுகளும், சுண்டுகளும் நமது காரியாலய மதில் சுவர் மேல் வரிசையாக அமர்ந்து எட்டணாவும், நாலணாவும் பெட் கட்டுவதைக் காண வேதனை. அப்புறம் அந்தப் பக்க



○ ராஜேஷ்குமார்



○ மாலன்



○ ராஜேந்திரகுமார்

மாக வரும்போது சிறுவர்கள்'' ரேஸ்புக் ஸார்! ரேஸ் புக்!'' என்று விற்று வருவதைப் பார்க்க யோசனை... இனிகேள்வியின் இரண்டாம் பகுதி: ஒளிப்பானேன்? ஒரு கதை எழுதுவதற்கு ரேஸ்கோர்ஸ் பற்றிய விவரங்கள் தேவைப்பட்டது. அனுபவம் பெற ஒரே ஒரு முறை இவ்விஷயத்தில் பழுத்துக் கொட்டை போட்ட நண்பர் ஒருவருடன்போனேன். அவர் சார்பில் அவர் பணத்தைக்கட்டிச் சீட்டு பெற்று வந்தேன். ஜெயிக்கவில்லை என்றாலும் கடைசியாக வரவில்லை என்ற அசட்டுத் திருப்தி!

○ மணிமாறன், சென்னை–17.

? கிட்டப்பார்வை தூரப்பார்வை என்றால் என்ன?

! உலகின் எந்த மூலையிலோ நடக்கும்ஆர்ப்பாட்டங்களை கலகங்களைத் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டுகிற அதே நேரத்தில், நமது நாட்டில் நடக்கும் கலாட்டாக்களைப் படம் பிடிக்கவோ ஒளிபரப்பவோ எண்ணாத தூரதர்சனைச் செலுங்கள். தூரப் பார்வைக்கு விளக்கம் கிடைக்கும்.

○ பா. தியாகராஜன், வேதாரண்யம்.

? ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுததாம்–இதற்கு சிறந்த ஓர் அரசியல் உதாரணம் தருக. புதுதில்லி மருத்துவமனையிலிருந்தஎன்.டி. ஆருக்கு இந்திராவும், ராஜீவும் பூச்செண்டு கொடுத்தனுப்பியதைத்தானே நான் உதாரணமாக்க வேண்டும் என்று எண்ணுகிறீர்கள்? ஓ. கே. எழுதியே விட்டேன்!

○ என். விக்னேஷ், சிதம்பரம்.

? ஒரு எம். எல். ஏ.யின் விலை என்ன?

தினமும் உயர்ந்து கொண்டே போகிறது மற்ற விலைவாசிகள் மாதிரி.

○ மேஜர் தாசன், ஈரோடு.

? ராஜேந்திரகுமார், ராஜேஷ்குமார் இவர்களின் எழுத்து நடைபற்றி?...

என்னதான் ராஜேந்திர குமார் அடிக்கடி ஙே என்று விழித்தாலும் மெலிதான ஒரு நகைச்சுவை நம்மை எப்படியோ லேசாகப் புன்னகைக்க வைத்து விடுகிறது. மற்றவரிடம் அது இல்லை. லைக்லியாக எழுதுவதில் ராஜேந்திர குமார் ஙே என்று விழித்துக் கொண்டு நிற்பதில்லை. இப்படிக் கூறுவதால் மற்றொருவருக்கு அப்படி எழுதத் தெரியாது என்பதுமில்லை, பரபரப்படையாமல் இயல்பான வாய்ப்பான தருணத்துக்குக் காத்திருப்பார். இருவருமே மர்மக்கதை மன்னர்களாகப் போட்டி போட்டாலும் கூட்டிக் கழித்துப்பார்க்கும் போது யார் முன்னிற்கிறார் என்று கேட்டால்... ஷ் ஷ் ஷ்!

○ என். பாலாஜி, காஞ்சிபுரம்.

? சர்க்காரியா கமிஷன் விவகாரத்தை எம்.ஜி.ஆர். கிளப்பியிருப்பது பற்றி...?

குற்றம் சுமத்தப்பட்டவர்களில் பெரும்பாலோர் இன்று எம். ஜி. ஆர். அமைச்ச



○ முரளி



○ சாரங்கபாணி

ரவையிலேயே இருப்பதால் கருணாநிதியைப் பொறுத்தமட்டில் எம். ஜி. ஆரின் இந்த மிரட்டல் வெறும் வெத்து வேட்டு.

○ நா. பாண்டியன், பெங்களூர்–20. ★

? நாங்கள் ஒரு சங்கம் அமைத்து நற்பணி செய்து வருகிறோம். அதனை மேலும் வளப்படுத்த சில வழிகளைச் சொல்லுங்களேன்?

! இப்படி ஒரு கேள்வி வருவதே இந்தக் காலத்தில் அதிசயமாகவும், ஆனந்தமாகவும் இருக்கிறது. மகாத்மா காந்தியின் பெயரால் நீங்கள் புரியும் பொதுநலச் சேவைக்கு வாழ்த்துக்கள். சமுதாயப் பணியாற்றும் போது உங்களுக்கு ஏற்பட்ட ரசமான அனுபவங்களைக் கவைபட எழுதி ஏதேனும் ஒரு பிரபல பத்திரிகைக்கு அனுப்பலாம். பிரசுரமானால் கிடைக்கும் புகழ் உங்கள் சமன் நிலையைப் பாதிக்க விடாமல் இருந்தால் அது உங்கள் நற்பணிகள் மேலும் வளர உதவும்.

○ பொ. பொன்ராஜ், கமுதி.

? புதியவன் முரளி எப்படி?

! பூவிலங்கில் முரளி புதியவர். கொஞ்சம் பயம், கொஞ்சம் பரவம், கொஞ்சம் அடக்கம் என்று அடக்கி வாசித்தார். புதியவனில் முரளி காமிராவுக்குப் பழையவன். குளிர் விட்டுப் போச்சு!

○ வி. சௌந்தராஜன், ஸ்ரீரங்கம்.

? சினிமா பற்றி எழுத்தாளர் மாலனிடம் டியூஷன் படிக்க வேண்டிய நிலையிலா கே. பாலசந்தர் இருக்கிறார்?

! அரங்கத்திற்கு வந்த பிறகு விமர்சனத்துக்குப் பயந்தால் எப்படி? முதல் காரியம் அந்த மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்வதாகத்தான் இருக்க வேண்டும். தெளிவு படுத்தலாம்; விமர்சகரின் தவறைத் திருத்தலாம். பதில்கூறலாம். ஆனால் விமர்சனமே கூடாது என்று சொல்ல யாருக்கும் அருகதை இல்லை. இந்திரா காந்தியின் செயல்களையே தராசு விமர்சிக்கிறேன். அவர் என்னிடம் டியூஷன் கற்க வேண்டும் என்று நான் கருதுவதாகவா அர்த்தம் பண்ணிக் கொள்வது? அழகுதான் போங்கள்!

---

தூக்கம் வந்து விட்டால் தலையணை தேவையில்லை. காதல் வந்து விட்டால் அழகே தேவையில்லை.

ஆப்கானியப் பழமொழி.
பொ. க. சேஷாத்ரி.



○ கமாலி, மேலப்பாளையூர்.

? எஸ். டி. எஸ். நீக்கப்பட்ட அதேசமயம் ஜெயலலிதாவும் கொ. ப. செ. பதவியிலிருந்து விலக்கப்பட்டுள்ளாரே?

! ஜெயலலிதாவின் ராஜினாமாவை ஏற்றதன் மூலம் தாம் இரு கோஷ்டிகளுக்கிடையில் நடுநிலையாக நடந்து கொள்வது போல் ஒரு தோற்றத்தை உண்டாக்க முயன்றிருக்கிறார் முதல்வர். இது யாரையும் ஏமாற்றாது. ஜெ. முன்னைப் போனதையும் விட கட்சியிலும் ஆட்சியிலும் செல்வாக்குடன் விளங்குவார். செல்வாக்கு இல்லாதவருக்குத்தான் பதவி தேவை.

○ லலிதா, அதிராமப்பட்டினம்.

? சாரங்கபாணியை ரசித்ததுண்டா?

! சிறுவனாக இருக்கும்போது, 'என் மனைவி' படத்தில் பிரதான பாத்திரமேற்று நடித்துச் சிரிக்கவைத்ததையோ இளைஞனாய் இருந்த போது கேட்ட ''அந்தக் காலத்துல நான் காலேஜிலே படிக்கிற போது'' வசனத்தையோ சாகும் வரை மறக்க முடியாது. நினைத்து நினைத்து மகிழாமல் இருக்க முடியாது என்றால் அதற்குக் காரணம் அதன் பின்னுலிருந்த சாரங்கபாணியின் முக பாவங்கள்தாம். இரட்டை அர்த்த ஆபாசவசனங்கள் இல்லாமலே சிரிக்க வைக்க முடியும் என்பதற்கு அவர் சான்று. தூய்மை, குற்றமற்ற ஹாஸ்யத்தில் மட்டுமல்ல; கதராடையிலும் உள்ளத்திலும் நடத்தையிலும் தூய்மை காத்து, காந்திப் பணியாற்றி நாடகம் சினிமா வாயிலாகவும் தேச சேவை புரிந்தவர்.... ஹூம்... அது ஒரு காலம்....! இப்பப் பேசிப் பயன் என்ன?

○ பி. எல். பரமசிவம், மதுரை.

? சமீபத்தில் தாங்கள் விரும்பிப் பார்த்த நாடகம்?

! ஆயிரம் உதை வாங்கிய அபூர்வ சிகாமணி மைனஸ் இரட்டை அர்த்தவசனங்கள். அந்த ஆபாச வசனங்களைக் கல்கி விமர்சனத்தில் கண்டிக்கவில்லையே என்று சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள். ''அர்த்தமுள்ள வசனம் போதாதா? இரட்டை அர்த்த வசனம் எதற்கு? அது இல்லாமலே சேகர் சோபிக்கலாமே' என்றுமுடித்திருக்கிறார் சாருகேசி. இப்படி நாலுக்காக எடுத்துக் காட்டினால் காணாதா என்ன?

ஆபாசத்தைக் கண்டிப்பதாகக் கூறிக் கொண்டு அந்த ஆபாச வசனங்களையும் படங்களையுமே பிரசுரித்து 'இதைத்தான் கண்டிக்கிறோம்' என்று கூறும் வியாபார உத்தி கல்கி அறியாதது அல்ல; ஆனால் அது நமக்குத் தேவையில்லாதது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
நா. பாண்டியன்,
22, சிவால் தார் தெரு.
சேஷாத்ரிபுரம்,
பெங்களூர்–20.

குளோஸ் அப்

# "உயிர் விட வேண்டாம்! உழைத்தால் போதும்!!"



சிவாஜி கணேசனைப் பேட்டி காண்பதென்பது ரொம்பவும் வித்தியாசமானது. மற்ற அரசியல்வாதிகள், சினிமாக்காரர்களின் பேட்டி என்றால் வெறும் உரையாடல்கள் தான். ஆனால் சிவாஜி ஒவ்வொரு கேள்விக்குப் பதிலளிக்கும் போதும் குரலில் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டுவருவார். முகத்திலே நவரசங்களைக் காட்டுவார். கைகளை, தலையை ஆட்டி.... அப்பப்பா! சிவாஜி பேட்டியைப் பத்திரிகையில் படிப்பதை விட, அதைப் படமெடுத்துத் திரையில் பார்க்கவே சுவையாய் இருக்கும்.

சில உதாரணங்கள் கூறுகிறேன். இதைப் படிக்கும் போது திரையில் நீங்கள் பார்க்கிற சிவாஜியைக் கொஞ்சம் நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். நான், ''காங்கிரஸில் உட்கட்சிப் பூசல்கள் ஏராளமாயிற்றே! நீங்கள் தலைவரானால், பிரச்சினையை எப்படிச் சமாளிப்பீர்கள்?'' என்று கேட்கிறேன். உடனே அவர் ராஜ கம்பீரமாய், இடது கையை ஸ்டைலாக இடுப்பில் வைத்தபடி, வலது கையினால் பெரிய மீசையை முறுக்குவது போல (உண்மையில் மீசை இல்லாவிட்டாலும்) காட்டி ''நான் தஞ்சாவூர்க்காரன்; பிரச்சினைகளைச் சமாளிப்பதில் சாமர்த்தியசாலி! ஹா, ஹா, ஹா...!'' என்று தன்னம்பிக்கையோடு பதில் அளிக்கிறார். சிவாஜியைக் குற்றம் சொல்வது போல அடுத்த கேள்வி என்று வைத்துக் கொள்வோம். முகத்திலே ஜிவுஜிவுவென்று கோபம் ஒளிர, கண்கள் விரிய, ''என்னைப் பற்றி இப்படி அபாண்டமாய் எப்படிச் சொல்லப் போயிற்று?'' என்று மேஜையை ஓங்கிக் குத்தியபடி பதில் வரும். ''உங்களைப் பற்றி உண்மைக்குப் புறம்பானவைகளைத் திருமதி காந்தியிடம் உங்களுக்கு வேண்டாதவர்கள் சொல்கிறார்களாமே?'' என்று கேட்டால், ஒரு குழந்தையைப் போன்று, நெகிழ்வுடன், ''என் மீது இப்படி பழி சுமத்துகிறார்களே! இது அடுக்குமா? அப்படியெல்லாம் நான் செய்வேனா?'' என்று அப்பாவித்தனமான பாவத்துடன் திருப்பிக் கேட்பார்.



சிவாஜியைப் பொறுத்த வரை அவரது அகராதியில், 'அரசியல்' என்பதற்கு ஒரே அர்த்தம் 'இந்திரா.' மரியாதையாய் 'அம்மா.' வேறு எந்தத் தலைவர் பற்றியும் அவர் கவலைப்படுவதில்லை. சிவாஜியை நான் பேட்டி கண்டபோது சொன்னார்: ''அம்மா, என்னை 'உயிரை விடு' என்றால் நான் உடனே உயிர் விடுவேன்!''

சிவாஜி, தம் ரசிகர்களை ஒன்றுதிரட்டி, மாநாடு நடத்தியவுடன், சிவாஜிக்கு எதிரான கோஷ்டியினர், இந்திராவிடம் போய் சிவாஜி, கட்சிக்கு எதிரான காரியங்களிலும் பிரிவினை வேலைகளிலும் ஈடுபட்டு வருவதாய், புகார் சொன்னார்கள். இதை அறிந்து சிவாஜி பிரதமரிடம் சென்று தமக்கு எதிரான பொய்ப் பிரச்சாரங்களை நம்பவேண்டாம் என்று எடுத்துச் சொன்னார். அப்போது பிரதமர் சொன்னாராம்: ''நான் உங்களை உயிரை விடச் சொல்லப் போவதில்லை; கட்சிக்காக மேலும் உழைக்கத்தான் சொல்லப் போகிறேன்:''

செட்டிலும் சரி, வெளியிடங்களிலும் சரி, சிவாஜி ஏதோ நெருங்க முடியாதவர்; அடுத்தவர்களைத் துச்சமாய் மதிப்பவர் என்பதாய் ஒரு பிரமை நிலவுகிறது! ஆனால் என் அனுபவம் முற்றிலும் வேறு. என்னிடம் எந்தவித பந்தாவுமில்லாமல் தான் பேசினார். அரசியல் மட்டுமின்றித் தம் குடும்ப விஷயங்கள் உட்பட பல தகவல்களைக் கூறினார். ''என் மனைவி மிக நன்றாகச் சமைப்பாள். நான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டதற்கு முக்கியக் காரணமே அவள் நன்றாய்ச் சமைப்பாள் என்பது தான்!'' என்று அவர் சொன்ன போது நான், ''உங்கள் உடம்பைப் பார்த்தாலே அது நன்றாய்த் தெரிகிறது'' என்றேன். சிவாஜி கோபப்படவில்லை, ரசித்துச் சிரித்தார்.

அரசியலில் சிவாஜி ஒரு குழந்தைபோல. அரசியல்வாதிகளுக்கே உரிய சூட்சும அறிவு அவருக்கு இல்லை; வெளுத்ததெல்லாம் பால் என நம்புகிற அப்பாவி.

அனிதா பிரதாப் கூறக் கேட்டு எழுதியவர்

**எஸ். சந்திரமௌலி.**



‘அனல் பறந்தது!’
‘கனல் தெறித்தது!’ —

என்றெல்லாம் சொல்லலாம் இந்த ஆண்டு பாரதியார் சங்கம் நடத்திய பாரதி விழாவை என்றால் முக்கிய காரணம் பன்னிரண்டு வயதுக்குமேல் கணிக்க முடியாத தோற்றமுடைய ஒரு பள்ளி மாணவி தான்! அவள் பெயர் தோ மீனாட்சி. மயிலை குழந்தைகள் தோட்டம் மேல்நிலைப் பள்ளியில் பயிலுகிறாள்.

பாரதியார் சங்கம் நடத்திய பேச்சுப் போட்டியில் பரிசு பெற்ற இவர், அலைஅலையாகக் கரகோஷத்தையும் ‘ஆஹா! ஓஹோ’ என்ற பாராட்டுக்களையும் பெற்றார்.

“ஜாதி மதங்களைப் பாரோம் என்றாயே, பாரதி! இன்று ஜாதி மதங்களின் பெயரிலேயே சங்கங்களும் கட்சிகளும் அமைக்கப் பெறுவதையும் அவற்றுக்கு அமைச்சர்கள் போட்டி போட்டுக் கொண்டு தலைமை தாங்கச் செல்வதையும் காணச் சகியாமல் தான் நீ சீக்கிரமே செத்துப் போனாயா?”

என்றும்,

“நான் பிறப்பதற்கு முன்பாகவே தரப்பட்ட வாக்குறுதிகளை இன்னமும் நிறைவேற்ற முடியவில்லையே?”

என்றும் பேசிய போது “shame shame” என்று அவையோரிடம் எதிரொலி கிளம்பியது. சிறுமியாக இருந்ததாலேயே அவரால் தயக்கமின்றி மனத்தில் பட்டதைப் பட்டுப் பட்டென்று கூறவும் முடிந்தது; கூட்டத்தினர் ஏற்றுக் கொள்வதும் சாத்தியமாயிற்று.

× பத்மா சுப்ரமணியம்



உண்மையில் பார்க்கப் போனால் தெரு வீதிகளில் சாதிப் பெயர்களை நீக்கியதற்கு மேலாக என்ன சாதிக்கப்பட்டுள்ளது? அமைச்சரவையில் இடம் பெறுவதற்குக் கூட ஜாதிதானே முக்கிய தகுதியாய்க் கருதப் படுகிறது!

செய்வன திருந்தச் செய்யும் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் வள்ளலார்—காந்தி விழாவையும் பாரதி விழாவையும் ஆண்டு தோறும் சொந்தப் பொறுப்பில் மிகச் சிறப்பாக நடத்தி வருகிறார். இம்முறை விழாவில் பரபரப்பு கூடியதற்கு மற்றொரு காரணம் திரு. அவ்வை நடராஜனின் பேச்சு. இவரது தமிழ்ப் பற்று வேறு யாருடைய தமிழ் அன்பைக் காட்டிலும் குறைந்தது

# பரபரப்பூட்டிய

அல்ல. இருப்பினும், பணம் தந்தாலும் தமிழ் மீடியத்தில் படிக்க முன் வரமாட்டேனென்கிறார்கள், பணம் கொடுத்து ஆங்கில மீடியமில் படிக்க போட்டி போடுகிறார்கள் என்றால்; அமைச்சர்கள், தமிழ் அறிஞர்கள் ஆகியோரின் பிள்ளைகளே ஆங்கில மீடியமில் தான் படிக்கிறார்கள் என்றால், இதையெல்லாம் கேலி அல்லது கண்டனம் செய்வது ஒருபுறமிருக்கட்டும், ஏன் என்று சிந்தித்துப் பாருங்கள் எதற்காக என்று யோசித்துப் பாருங்கள் — இக்கருத்துப்பட அவ்வை பேசியதும் லட்சிய நோக்கிலன்றி யதார்த்த ரீதியில் சிந்தனையைத் தூண்டியதுமே தவறு என்பது போல் சிலருக்குக் கோபம் வரவே செய்தது. அவ்வை கடுமையான கண்டனத்துக்கு உள்ளானார். நன்றி உரை கூறிய பகீரதன் கூட அவரைத் தாக்கப் போக, பாரதி சங்கத் தலைவர் நா. மகாலிங்கம் பகீரதனுக்குப் பண்பாடு பற்றி நினைவூட்ட நேர்ந்தது!

இத்தருணத்தில் Authors Guild of India நடத்திய கல்கி விழாவில் திரு. சி. சுப்பிரமணியம் பேசியது நினைவுக்கு வருகிறது. பொருளாதார விஞ்ஞான விஷயங்களைக்கூட

× தோ மீனாட்சி





✕ நா. மகாலிங்கம்

நன்கு புரிந்து கொண்டு வாசகர்களுக்கும் எளிதாகப் புரிய வைப்பார் கல்வி என்று கூற வந்த இடத்தில் திரு. சி. எஸ். இன்று பி. ஏ. பொருளாதாரத்துக்கான தமிழ்ப் பாடப் புத்தகத்தின் தொடக்க வரிகளை எவ்வளவு அபத்தமாக உள்ளன என்று எடுத்துக் காட்டினார்.

The Government has a Crucial role to play in the Economic developm:nt of the country என்பதைத் தமிழாக்கம் செய்கையில் Role என்பதை உருளை என்றும் Play என்பதை விளையாட்டு என்றும் மொழி பெயர்த்து.மூன்றாண்டுகளாக இந்தப்புத்தகம்

# பாரதி விழா

பாடப் புத்தகமாக இருக்கிறது' என்றார்.

நாம் தமிழை வளர்க்கும் லட்சணம் இப்படி உள்ளது! இப்படியெல்லாம் நடக்கும் என்று உணர்ந்தவராதலால்தான் ராஜாஜி கூறினார்: 'பாடப் புத்தகங்களை மொழி பெயர்க்க அவசரப்படாதீர்கள். பாடப்புத்தகங்கள் ஆங்கிலத்திலேயே இருக்கட்டும். வகுப்பில் விரிவுரையாளர் தமிழில் பேசலாம். உரையாடலாம். சந்தேக விளக்கம் அளிக்கலாம் என்று ஏற்படுத்துங்கள். தமிழ் அப்போது இயல்பாக ஆங்கிலக் கலைச் சொற்களை ஏற்று வளப்பட்டுவிடும். புத்தகங்களை மெல்ல மெல்ல உருவாக்கிக் கொள்ளலாம்' என்றார். கேட்பார் யார்?

பாரதி விழாவில் மடை திறந்த வெள்ள மெனப் பேசிய திரு. வலம்புரி ஜான். ''நூற்றாண்டு விழாவில் மகாகவி பாரதி பற்றிய நூல்கள்'' என்று தமக்குத் தரப் பட்ட தலைப்பைத் தொட்டாரே தவிர. தொடரவில்லை. காரணம், அவ்வாண்டில் வெளியான ஏராள நூல்கள் என்றாலும் பாரதியின் 'காலனுக்கு உரைத்தல்' பாடலை எடுத்துக் கொண்டு அமர்க்களப் படுத்தித் தான் விட்டார்.

காலா, உனைநான் சிறுபுல்லென மதிக் கின்றேன்; என்றன்



✕ ம. பொ. சி



✕ வலம்புரிஜான்



✕ பகீரதன்



✕ ஔவை நடராசன்

காலருகே வாடா! சற்றே உன்னை மிதிக்கின்றேன் — அட காலா!

''புல் என்றாலே அற்பம்தானே அதிலும் சிறுபுல் என்கிறானே பாரதி. நமக்கு யாரையாவது உதைக்க வேணுமானால் தேடிப் போய்த்தான் உதைப்போம். ஆனால் மரணத்துக்கு அஞ்சாத பாரதி அந்த அளவுக்கு மதிப்புத் தரத் தயாராயில்லை காலனுக்கு. நீ வாடா இங்கே! என் காலால் மிதிபடு! என்கிறான். அதுவும் போனால் போகட்டும். காலனுக்கு ஒரு கௌரவம் அளிப்போம் என்பது போல சற்றே உன்னை மிதிக்கின்றேன் என்றல்லவா .சொல்கிறான்!

''நானறிந்தவரை உலகமகா கவிகளில் யாருமே இப்படிப் பாடியதில்லை'' என்றார் ஜான். 'நீங்கள் அறியாத சில உலகக்கவிஞரும் கூட இப்படிப் பாடியிருக்க முடியாது' என்று துணிந்து கூறத் தோன்றுகின்றது நமக்கு.

பாரதியை அவரவரும் தத்தமது வட்டத்துக்குள் (ஆத்திகர், நாத்திகர், ஜனநாயக வாதி, கம்யூனிஸ்டு மற்றும் பல்வேறு கட்சியினர்) அடைக்க முயலவேண்டாம் என்ற வலம்புரிஜானின் கருத்து வரவேற்கத்தக்கது.

'காந்தியை பாரதி பாடியிருப்பதாலேயே காங்கிரஸ் அவனுக்கு உரிமை கொண்டாடும் தகுதியை இழக்கிறது என்று அவர் ஒரு முறைக்கு இருமுறையாகக் கூறியபோது அரங்கம் அதிர்ந்தது — எதிர்ப்பிலே அல்ல கரவொலியிலே தான்! காங்கிரஸின் அறம் இன்று அந்த நிலையில் உள்ளது!

இதையொட்டிப் பின்னால் பேசிய திரு. ம. பொ. சி., ''பாரதி எத்தனையோ அமைப்புகளை, தலைவர்களை, தேசங்களைப் பற்றியெல்லாம் பாடிய போதிலும் காங்கிரஸ்காரனாகவே இருந்தபோதிலும் காங்கிரஸை அவன் பாடவில்லை; காரணம்: விடுதலை பெற்றதுமே காங்கிரஸின் பணி முடிந்ததாகக் கருதப்பட்டு அது கலைக்கப் படும் என்று காந்திஜி உள்பட அன்று அனைவருமே கருதியதுதான்'' என்றார்.

அடடா! மெய்யாலுமே அண்ணலின் அந்தக் கருத்து மட்டும் நிறைவேறியிருந்தால்... ஹூம்... இப்போது நெடுமூச்சு விட்டு என்ன பயன்?

-குட்டி கிருஷ்ணன்



# தமிழ், தமிழ், தமிழ் மேடைப் புகழ் போதுமா?

**பலத்த எதிர்ப்புக்கும் கண்டனத்துக்கும் கூட உள்ளாயிற்று பாரதி விழாவில் அவ்வை நடராஜன் பேச்சு! அப்படி என்ன தகாத விஷயம் பேசி விட்டார் அவர்? நேயர்கள் ஆழமாகச் சிந்திக்க உதவும் என்பதால் அதன் சாராம்சத்தை இங்கு தருகிறோம்:**

**மொ**ழிப்பற்று என்பது நம் நாட்டில் என்றும் குறைந்தது கிடையாது. நாம் எப்போதுமே தமிழை நமது தாயாகவும், இறைவனாகவும் கருதுகிறோம். ஆனால் தமிழ் படிக்கின்ற ஆர்வம் கல்லூரி மாணவரிடையே, பள்ளி மாணவரிடையே எழ வேண்டாமா? நமக்குத் தெரிந்த தமிழ் அறிஞர் பலரும், ஏனைய பிறரும், தங்கள் பிள்ளைகளைத் தமிழில் கல்வி பயில ஏன் ஊக்குவிப்பதில்லை என்பது பற்றி நாம் சிந்திக்க வேண்டாமா?

மேடையில், தமிழ் மொழியின் சிறப்புப் பற்றி நன்றாகப் பேசுகிறோம். ஆனால் நாம் ஏன் நம் பிள்ளைகள் தமிழில் கல்வி பயில்வதில் இன்று ஆர்வம் காட்டுவதில்லை? தமிழ் என்கிற மொழியை, ஒரு கலைப் பொருளைப் போல ஆக்கியிருக்கிறோம். சிலை மாதிரி, ஓவியம் மாதிரி, சிற்பம் மாதிரி ஒரு கலை வடிவத்தில் அதை வைத்துக் கொண்டிருக்கிறோம். இப்போது வருவாய் தருகிற கல்வியைத் தேடித்தான் மாணவர்கள் விருப்பத்தோடு போவார்கள். ஒரு புரோகிதர் அல்லது ஒரு பாடகர், தன் பிள்ளை தனது தொழிலையே மேற்கொள்வதை விரும்புவதில்லை என்றால், நிரந்தர வருவாய் போதிய அளவு இல்லாததே காரணம். தமிழ் படிப்பதும், தமிழில் படிப்பதும் ஊக்குவிக்கப்படாததற்கும் அதே காரணம் தான். ஆங்கிலக் கல்வி அளிக்கும் வாய்ப்புக்கு ஓர் இணையான வருவாய் வாய்ப்பை ஏற்படுத்தியிருந்தால், தமிழில் கல்வி கற்கப் போட்டி இருந்திருக்கும். இவைகளை எல்லாம் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். ஆக, கலை வடிவாக இருக்கிற மொழியை, அறிவியல் மொழியாக, தொழில் நுட்ப மொழியாக, மேலும் மேலும் வளப்படுத்த வேண்டும் என்பது தான் இன்றைய தேவை.

ஒருவர் இஞ்சினீயராக இருந்து துணை வேந்தராக ஆனாலோ, அல்லது ஒருவர் டாக்டராக இருந்து துணைவேந்தராக ஆனாலோ, அவர் பெரிய கல்வியாளர்; அவர் பெரிய அறிஞர் என்கிறோம். ஆனால் ஒரு தமிழ் ஆசிரியர் என்று வரும்பொழுது மட்டும், அவர் தமிழ் அறிஞர்; அதனால் துணை வேந்தர் ஆக்கியிருக்கிறோம்!' என்கிறோம். இவர் விஷயத்தில் மட்டும் ஏன் இப்படிக் கூறுகிறோம்? 'பாவம், பிழைத்துப்போசட்டும் தமிழ்!' என்று கொடுப்பது போல் ஏன் ஒரு சூழ்நிலை உண்டாக வேண்டும்? அப்படி ஒரு தாழ்வு மனப்பான்மை உருவாகும் நிலைமை ஏன் வர வேண்டும்? ஆங்கிலத்தில் கற்றறிந்தவன் அறிவு பல துறைகளிலும் விசாலப்பட்டிருக்கும், விரிவடைந்திருக்கும் என்றும் தமிழ் படித்தவன் தமிழில் மட்டும் புலமை மிக்கவனாய் இருப்பான் என்றும் சரியாகவோ, தவறாகவோ நாம் நினைப்பதே காரணம்.

தமிழ் வளர்ச்சி என்பது, தமிழ் மக்களுடைய வளர்ச்சி, தமிழ் இனத்தின் வளர்ச்சி என்று கண்டவர் பாரதி. தமிழ் ஓர் அலங்கார மொழியாக இருந்தால் போதாது. தேசத்தின் ஆக்க பூர்வமான முன்னேற்றத்துக்கு உதவ வேண்டும் என்று எண்ணியவன். தமிழ் படித்திருந்தால் பெரிய அறிவியல், தொழில் துறை அமைப்புகளுக்குத் தலைமைத் தாங்கும் அளவுக்கு, அல்லது முன்னின்று நடத்துகிற அளவுக்கு ஆற்றல் இல்லை என்ற ஒரு கருத்து நிலவுகிறதே — இதை எப்படிப் போக்குவது என்று நாம் யோசனை செய்ய வேண்டாமா?

''நமது நாட்டில் கொள்கைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்த மனிதர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால் கொள்கைகளை மனத்தில் ரசித்தல் என்பதுவேறு; அதன்படி நடத்தல் என்பது வேறு'' என்றான் பாரதி.

உண்மைதான். கொள்கைகளைக் காரிய சாத்தியமான ஆக்கபூர்வமான நடைமுறைத் திட்டங்களாக உருமாற்றி, அமல்படுத்தும் ஆற்றலை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டாமா?

-நமது நிருபர்

# ஒரு தாவணிக் கனவு

செங்கீரன்

வாக்குச் சீட்டுகளின்
செங்கல் கட்டிடங்கள் — இந்த சட்டமன்றங்கள்!
ஜனநாயகச் சிமிண்டு கலவையில்
பூசிய கட்டிடங்கள் — இந்தச் 'சீட்டுக்கட்டு' மாளிகைகள்

ஆனால்—

மக்களின் அடிவயிற்றுப் பிரச்னைகள்
இன்னும் ஆழத்திலேயே கிடக்க—
அஸ்திவாரத்தைக்கட்ட
இவர்கள் மறந்து போனதால்
இவை இன்று ஆட்டம் காண்கின்றன.
அடிப்படையின் வேர்கள்
கா ஊன்றவில்லை.

அதனால்—

இவை இன்னும்
அட்டைக் கத்திகளின் ஆயுதக் கிடங்குகள்தான்.
நீதியின்இந்த தராசுத் தட்டுகளில்
கற்றை நோட்டுக்களின்
கனம் தாங்க முடியாமல்
வாக்குச் சீட்டுகள் மேலே வந்தன.
'வாக்குச்' சுத்தங்கள் கீழே இறங்கின.

இந்த இரண்டு கால்
'நாற்காலி'கள்
அடிக்கடி நிறம் மாறிக் கொண்டதால்
மிருகங்களும் வெட்கம் கொண்டன.

பதவி வாசனைக்கு
அலைகின்ற பெருச்சாளிகள்
தங்கள் 'சந்து பொந்துகளை'
அடிக்கடி மாற்றிக் கொள்ளும் போது
இந்த இருட்டு வியாபாரங்களுக்கும்
'அசோக சக்கர'த்தின்
'அக்மார்க்' முத்திரைகள்
அங்கீகாரம் தருகின்றன.

ஆட்சிக் கவிழ்ப்பும், கட்சித் தாவல்களும்
நிறைந்த
இந்த வக்கிரங்களுக்கிடையேயும்—
ஓ! சுதந்திர தேவியே!
உன் தூக்கம் ஏன் இன்னும் கலையவில்லை?
''ஆடுவோமே பள்ளு பாடுவோமே''
என்று இன்னும் பட்டொளி வீசும்
உன் மூவர்ணத் தாவணிக் கனவுகளிலிருந்து
உண்மையான ஜனநாயகத்தின்
'கெட்டி'மேளம்
எப்போது கேட்கப் போகிறது?



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

# இப்போது... சருமத் தொல்லைகளை அகற்றிடுக
# ஆரோக்கியமும் இயற்கைப் பொலிவும் பெற்றிடுக.

## Godrej நிமின்

### தூய வேப்பெண்ணையின்
### இயற்கை குணம் கொண்ட சோப்

நீம், மார்கோஸா எனப்படும் வேப்பிலை சரும தொல்லைகளை விரட்ட இயற்கை தந்த வரப்பிரசாதம். தொடர்ந்து வேப்பிலை உபயோகித்தால் உங்கள் சருமம் பளபளப்பாகவும் தெளிவாகவும் விளங்கும்.

கோத்ரெஜ், தூய வேப்பெண்ணையை நிமின் சோப்பில் கலந்துள்ளது. உங்கள் சருமத் தொல்லைகளை குளித்து ஒழிக்க ஒரு புத்துணர்ச்சியூட்டும் டாய்லெட் சோப். கோத்ரெஜ் தரும் நிமின் வெகுவாக நீடித்து நிற்கும். ஏனெனில் மற்ற வேப்பிலை சோப்புகளைப்போல கொழ கொழவென மாறுவதில்லை.



**நிமின்—உங்கள் கவனிப்புக்கிணையாக சருமத்தைக் கருத்துடன் காத்திடும்.**

CHAITRA-B G 230 TAM

